# திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா

(மூலமும் உரையும்)



நூலாசிரியன்

க. கணபதிப்பிள்ளை

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | - | சர்வதாரி ஐப்பசி 2008 |
| நூற்பெயர் | - | திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா |
| ஆக்கமும் உரையும் | - | க.கணபதிப்பிள்ளை |
| | | தமிழ்க் குடில் |
| | | நெல்லியடி கிழக்கு, |
| | | கரவெட்டி |
| பதிப்புரிமை | - | ஆக்கியோனுக்கே |
| அச்சுப் பதிப்பு | - | லெட்சுமி ஓவ்செற் பிறிண்டேஸ் |
| | | நாவலர் மடம், கரவெட்டி |
| பக்கங்கள் | - | 101 |
| விலை | - | இலங்கை ரூபா - 150/= |

## அணிந்துரை

## திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா

கற்குஞ் செய்யுட் சொற்சிறப்பும் பொருட்சிறப்பும் பற்றிய உணர்வுகள் நெஞ்சக்குகையுட் கிடந்து தம்மிற் கலவிசெய்வதால் விளையும் மதுகைக்களிப்பே சிலேடை உணர்வாகும். கற்கும் நூற்பரப்பின் அளவைப் பொறுத்து அவ்வுணர்ச்சிகள் தாமும் விகிதாசார ரீதியில் அமையும். திருச்செந்தூர்ச்சிலேடை வெண்பாவின் ஆக்கியோனுக்குத் தமிழிலக்கியப் பரப்பில் அதிபட்ச ஆட்சியுண்மை அவர்தம் கந்தபுராண யுத்த காண்டப் (சிங்கமுகன் சூரபன்மன் வதைப் படலங்கள் நீங்கலாக) பதினொரு படலங்களினதும் கோணமலையமக அந்தாதியினதும் உரை வளங்கொண்டு ஏலவே நன்கறியப்பட்ட ஒன்றாகும். இதற்கு அல்லி அரசாணிமாலை கூட அவர் பார்வைக்குத் தப்பவில்லை என்பதை இந்நூல் 89ஆஞ் செய்யுள் உரை வலியுறுத்திச் சான்று தருகின்றது.

சமஸ்கிருத இலக்கியச் சொற்கள் கூட ஏலுமாற்றான் இசைவுற்று அவர் தம் சிலேடைப்புணைவுக்குக் கைதந்து நிற்றல் காணலாம். நாரதசகாயன்-நார் அத சகாயன் எனச் (அன்பை அழிக்கத் துணை நின்ற சூரபன்மன்) செய். 75 இல் பதப்பிரிப்பாகிறது. ஹத என்ற சமஸ்கிருதச்சொல் அத எனத்திரிந்து சிலேடைக்கு இசைவுற்று நிற்கின்றதிங்கு.

இலக்கியத்தில் அருகல் வழக்குச் சொற்கள் கூட இவர்தம் சிலேடைப்புனைவில் வேண்டியது முடிக்க முன்வந்துதவும் பாங்குங்காணத் தகும். கமம்-நிறைவு-செய் 27, சேகு-வயிரம் 28, ஆலம்-நீர் 44, காண்-அழகு 48, ந-சிறந்த 50, சிக்கம்-குடுமி 52, சரம்-சஞ்சலம் 62, தீ-அறிவு 71, அரி-கட்டில் 38, வந்து-காற்று 69, பீள்-கரு 87, போல்வன எடுத்துக்காட்டுகள்.

பிரதான சிலேடை வகை இரண்டில் பிரிமொழிச்சிலேடையே இங்கு பெருவரவிற்றாயுள்ளது. செய்யுள் தோறும் இரண்டாவது அடி சாதாரண சிலேடையாகவும் மூன்றாவது நான்காவது அடிகள் யமகச் சிலேடையாகவும் அமைகின்றன. இவற்றிற்பல சொற்பகுப்பு விதத்தில் அசாதாரணத்தன்மை தோற்றுவித்து முதலில் மயங்கவைத்து முடிவில் இன்புறுத்துவன.

கானவட்கும் தண்ணளியைக் கந்தரத்துக் கட்டினான் என்பது கம்தரத்துக்கு அட்டினான் என நின்று மேகத்தின் தகுதி அளவாகச்சொரிந்தான் (செய்-17) என வருவதும், ஆடற் போர்க்காளையரும் தெம்மாங்குப் பாடிவரும் என்பது தெம் ஆங்கு பாடி வரும் எனப்பிரிந்து போர் அமைந்த அவ்விடங்களிற் பாசறைக்கு வரும் (செய் 43) எனப் பொருள் தருவதும், அருணகிரிக்களியன் என்பது அருள் ந கிரிக்கு அளியன் என விரிந்து அருள் சார்ந்த சிறந்த குன்று களில் வைக்கும் கருணையாளன் என நிற்பதும்,

காளைப் போர்க்காளியரும் சிந்துரக்கப் பாடவரும் என்பது போாக்கு ஆளியரும் சிந்துர கப்பு ஆட வரும் எனச் சொற்பகுப்புற்று ஏறு தழுவற்போருக்குச் சிங்கம் போல்வாராகிய வீரரும் யானை போலும் புயங்கள் அசையுமாறு எழுந்து வரும் எனப் பொருள் தருவதும் (செய் 77) கல்லாலான் கற்புதவஞ்சாடினான் என்பது கல்லாலான் கற்பு உதவு அஞ்சு ஆடினான் என நின்று தியானத்துக்குதவும் ஐந்தொழில் நடனம் ஆடினான் எனப் பொருள் விரிவதும் (செய் 92) ஆகிய சிலேடைத்தொடர்களும் பிறவும் அசாதாரணத்தன்மையாய் இன்புறுத்துவன

இவ்வாசிரியரின் முதற்சிலேடைப்பிரபந்தமான தச்சைச்சிலேடை வெண்பா 1977இல் வெளிவந்துள்ளது. அதில் தச்சந்தோப்பு விநாயகர் ஆலயஞ்சார்ந்த கரவெட்டி மருத நிலச்சூழல் வர்ணனை அலர்ந்தவாறே இந்நூலிலும் செந்தில்வேள் ஆலய நெய்தல் நிலச் சூழல் அலர்ந்துள்ளது. சிலேடைப்புனைவில் இரு பிரபந்தங்களும் ஒரே உத்தியையே மிகுதியுந் தழுவியுள்ளன. மும்மொழிச் சிலேடைச் செய்யுள் தொகை இதிலுள்ளதற்கு இருமடங்குக்கும் சற்றதிகமாகத் தச்சைச்சிலேடையில் இடம் பிடித்துள்ளது. அதில் 90ஆஞ் செய்யுள் நான்மொழிச்சிலேடையாகவும் மலர்ந்திருப்பது சிறப்பம்சமே. இதில் உள்ளது போன்றே தச்சைச்சிலேடையிலும் சமஸ்கிருதச் சொற்களைத் தமிழ்க்கிசைத்துச் சிலேடைப்புனைவுக்கு உதவக் கொண்டவித்தகம் 24 ஆஞ் செய்யுளிற் காணப்படுகின்றது.

“தொண்டருக்குப் பாசுபதமீந்தார்” என்பது ஒரு தொடர்மொழி. இதில் பாசு-ஒளி எனப்பொருள்தரும் இப்பொருளை, பாஸ்கரன் முதலாம் வடமொழித் தொடர்களிற்காண்க. இங்கே பாஸ் என்பது பாசு எனத்தமிழிசைவு பெற்றுச்சிலேடைக்குதவுவதாயிற்று. இத்தகைய குறிப்புகள் இருப்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்பே இவ்வாசிரியருக்குச் சிலேடைவெண்பாப்புனைவில் உள்ள புலமை முதிர் நிலையில் இருந்தமைக்குச் சான்றுகளே. இவ்வாற்றால், கலைசைச் சிலேடைவெண்பா ஆசிரியர் முதலியோர் போலச்சுய நிறைவானவர் சிலேடைப்புலவர் அன்பர் கணபதிப்பிள்ளை என்பதற்கையமில்லை.

யாழ்ப்பாணத்துள்ள சிவநெறியினர்க்குச் சிதம்பர தலம்போலவே திருச்செந்தூரும் ஆன்மரஞ்சகமான பக்திவழிபாட்டுத்தலமாதல் நன்கறியப்பட்டதொன்று. அதற்கிணங்கப்புலவர் கணபதிப்பிள்ளைக்குத் திருச்செந்தூர் ஆன்மரஞ்சகமான பத்தித்தலமாயிருந்தமை இந்நூல் 12,22, 25,70,86ஆஞ் செய்யுட்பகுதிகளாற் புலனாம். இப்பகுதிகள் இவரது தச்சைச் சிலேடை வெண்பாவில் 11,14,22.28,30,36 ஆஞ் செய்யுட்பகுதிகளோடு இணைந்திருப்பதும் நோக்கற்பாலதே.

கந்தபுராண வரலாறு செந்தூர்த்தலத் தோடும் நெருங்கிய சம்பந்தமுடையது. அதே அளவுக்குக் கந்தபுராண வரலாறுகள் திருச்செந்தூர்ச்சிலேடை வெண்பாவிலும் சம்பந்த முற்றிருப்பது சுவாரஸ்யமான ஒன்றாகும். கிரவுஞ்சம் அழித்தமை செய் 26, பிரமனைக் குட்டிச்சிறையில் அடைத்தமை 20, நெற்றிக்கண்ணில்

செந்தில்வேள் தோன்றியமை 14, சூரசங்காரம் 15, வள்ளியை ஆட்கொண்டமை 17, வேங்கை மரமாயினமை 36, அக்கினிதேவன் தேர்க்கொடியானமை 57, முதலாய நிகழ்வுகள் சிலேடைப்பாணியிற் பட்டொளிர்தலிற் புதிய இரசனை நயமுண்டு.

இலக்கணத்திற் சுத்தத்தெளிவும் நிகண்டுப் பயிற்சியும் இன்மையால் இலக்கியக்கடலில் சவள் இல்லாத வள்ளம் போலத் தத்தளிக்கும் இலக்கிய ஆர்வலருக்கு உறுதுணையாம் வகையில் இவ்வாசிரியர் தாமே தந்திருக்கும் உரைவிளக்கம் உபகாரமாயிருந்து இலக்கியப்பயன் நுகரவைக்கும் திறத்ததாகும்.

இந்நூல் உரைத்தரமும் தகுதியும் உற்றுணரப்படுங்கால் கவித்துவமும் உரைத்திறமும் அபாரப்புலமையும் மிக்க இருபாலைச்சேனாதிராயர், சுன்னாகம் முத்துக்குமார கவிராயர், நல்லூர்ச் சின்னத்தம் பிப்புலவர் உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவர் போன்றோராற் பெருமையுற்றிருந்த யாழ்ப்பாண இலக்கியவளம் நம் கண்காண இன்றும் இருந்து கொண்டிருக்கின்றது என எண்ணி இறும்பூதடையலாம் எனல் மிகையன்று.

இலக்கியகலாநிதி பண்டிதர் மு.கந்தையா

மு.கந்தையா
"சத்திமுற்றம்"
ஏழாலைமேற்கு,
சுன்னாகம்.

## செந்தூர்ச் சிலேடைவெண்பா

### விநாயகர்

*பூக்குஞ் சரப்பிள்ளை புந்தித் தடம்பூத்து*
*மோக்குஞ் சரமா முகிழ்க்குமே - மாக்கவின்பூக்*
*கொங்கலரத் தென்றல் குளிர்நெய்தற் கானலெங்குஞ்*
*சங்கலருஞ் செந்தூர்த் தமிழ்.*

பதவுரை

மா கவின் பூ கொங்கு அலர-பேரழகு மலர்களின் வாசனை விரிய, தென்றல் -தென்காற்றோடு, குளிர் நெய்தல் கானல் எங்கும் சங்கு அலரும் - தண்ணிய கடல்சார் நிலத்துள்ள கழிகளாகிய எவ்விடத்தும் சங்குகள் மலர்கின்ற, செந்தூர் தமிழ்- திருச்செந்தூர்த் தலமீது, பாடப் பெறும் சிலேடை வெண்பா என்னும் தமிழ்ப்பிரபந்தம், பூ குஞ்சர பிள்ளை புந்தி தடம் பூத்து- அழகிய யானைக் கன்றாகிய பிள்ளையாரது இதயமாகிய தடாகத்தில் மலர்ந்து, மோக்கும் சரம் ஆ முகிழ்க்கும்-முகரும் மலர்வடமாக அரும்புதல் செய்யும்.

விளக்கக்குறிப்பு

இது நூல் முட்டின்றி நிறைதல் வேண்டி முதற்கண் கணபதியைக் காவல் வைத்தவாறாம். எனவே, இது வழக்கில் வந்த வழிபடுதெய்வ வணக்க மாயிற்று. தடம் குளமன்றி மலையுமாதலின் நீர்ப்பூக்களன்றி மலைப்பூக்களையுங் கொள்க..

மோத்தல்-மணந்து பார்த்தல், சரம்-ஈண்டு பாமாலை குறித்தது. மா கவின் பூ-மா மரத்துள்ள அழகுமலர்களுமாம். கொங்கு-தேன், மகரந்தம் எனப்பிறவுந்தந்தது. தென்றல்-தென்திசைக்காற்றாகிய மென்காற்று. சரம் ஆக-ஈறுகெட்டது.

### கோணேசர்

*பிள்ளை தமிழ்க்கருளைப் பெய்கென்று தாதைதனை*
*உள்ளுவதோ நாளு முமைத்தாயார் - வள்ளல்*
*சுனைப்பாப நாசத் துளியருந்திப் பாச*
*முனைப்படங்க வீழ்தன் முறை.*

பதவுரை

பிள்ளை தமிழ்க்கு அருளை பெய்க என்று-மைந்தனாகிய இளமுருகனது செந்தூர்ச்சிலேடை வெண்பா என்னும் தமிழ்நூலுக்கு அருண்மழையைப் பொழிக வென்று, தாதை தனை உள்ளுவதோ-தந்தையாகிய சிவபெருமானைத்தியானிப்பதோ. நாளும்-அதனைவிடுத்துத் தினந்தோறும், உமைத்தாயார் வள்ளல்-மாதுமையாகிய உலகமாதா அருள்வள்ளல் ஆகிய கோணப்பிரான் என்னும் இருவரதும், பாபநாச சுனை துளி அருந்தி-பாபநாசச் சுனையில் துளிநீரை ஆசமனஞ்செய்து, பாச முனைப்பு அடங்க வீழ்தல் முறை - மும்மலத்தளையாகிய உத்வேகம் அடங்குமாறு வீழ்ந்து வணங்குதலே செய்கடனாம்.

வி.கு.

உள்ளுவதோ என்னும் வினா எதிர்மறைப் பொருள் தந்து. தந்தை மகற்கு உதவுதல் உலகவழக்கு என்னும் நியதியை நினைவுசெய்தது. உமைத்தாயார் என்னும் சார்பு, வள்ளலைக் கோணப்பிரானாக்கியது. பாபநாசம்- அங்குள்ள தீர்த்த விசேடம், தமிழ்-ஆகுபெயர், பெய்கென்று-விகாரம் பெற்றது.

நூல்

*பொன்னம் புயத்தேனும் போம்வங்கத் தாரொலியுஞ்*
*சின்னந் துடைக்கவிழுஞ் செந்தூரே-யென்னெஞ்சப்*
*போதகத்துக் கன்று புகுந்தார் புனற்சடையர்*
*போதகத்துக் கன்று புகல்*

ப-ரை

பொன் அம்புய தேனும் - அழகிய தாமரைமலரில் உள்ள தேனும், சில்நந்து உடைக்கு அவிழும் செந்தூரே - சிலவாகிய சங்குகளின் தகர்ப்பினால் நெகிழுகின்ற திருச்செந்தூரே, போம் வங்கத்தார் ஒலியும் - கடற்குச்செல்லும் மாலுமியரது ஆர்ப்பொலியும், சின்னம் துடைக்க விழும் - பல்வேறு வாத்திய ஒலிகள் அழிப்பதனால் கீழாகின்ற, செந்தூரே-, என் நெஞ்ச போது அகத்துக்கு அன்று புகுந்தார் - எனது இதயமாகிய மலரிடத்தே அற்றை நாளில் பிரவேசஞ் செய்தவரும், புனல் சடையர் போதகத்து கன்று - கங்கை வேணியராகிய சிவபிரானக்கு ஞானக்குழந்தையும் ஆகிய செவ்வேட்கடவுளின், புகல்- இருப்பிடம் ஆகும்.

வி.கு

போம்-கடலுக்குச் செல்லும், கடலிற் செல்லும் எனநின்றது. சின்னம் - ஆலயம், நாடக நடன அரங்கு என்பவற்றில் ஒலிக்கும் வாத்தியங்கள், விழுதல் கீழாகிப்போதல், அது வாத்திய ஒலிக்குள் வங்கத்தார் ஒலி அடங்கியவாறாம். போதகத்துக்கன்று ஞானமே வடிவான குழந்தை. இது "ஞானந்தானுருவாகிய நாயகன்" என்னும் சிங்கமுகாசுரன் கூற்றாலும் உறுதிசெய்யப்பட்டது.

உடை-முதனிலைத்தொழிற்பெயர் உடைக்கு-உருபுமயக்கம், துடைக்க-ஏதுப் பெருளில் வந்த வினையெச்சம், புனல்-கங்கைகுறித்தது. (1)

*கோவலராங் காளையருங் கோபுரத்து வான்கொடியுஞ்*
*சேவலைத் தாங்கிவருஞ் செந்தூரே-காவலர்ந்த*
*குன்றங் கெடுத்தான் கொடிநுசுப்பர் பாங்கனிருட்*
*குன்றங் கெடுத்தான் குடில்*

ப-ரை

கோவலர் ஆம் காளையரும்-இடையராகும் காளை ஒக்கும் வீரரும், சே அலைத்து ஆங்கு இவரும்-காளை எருதுகளை அலைவுசெய்து அவற்றின் முதுகில் அமர்கின்ற, செந்தூரே-; கோபுரத்து வான் கொடியும்-கோபுரத்துள்ள நீண்ட கொடிகளும், சேவலை தாங்கி வரும்- கோழிச்சேவலின் உருவங்களைத்தாங்கி வருகின்ற, செந்தூரே-; கா அலர்ந்த குன்று அங்கு.

எடுத்தான்-சோலைகள் மலர்ந்த கோவர்த்தனகிரியை அந்த ஆயர்பாடியில் எடுத்துத்தூக்கிய திருமாலுக்கு, கொடி நுசுப்பர் பாங்கன்-புதல்வியராகிய பூங்கொடி போலும் இடையமைந்த அமுதவல்லி சுந்தரவல்லி என்னும் இருவர் பக்கத்திருப்பவரும், இருள் குன்றம் கெடுத்தான்-இருளைத்தன்னிடங்கொண்ட கிரவுஞ்ச மலையை அழித்தவருமாகிய முருகனது, குடில்-குடிசை ஆகும்.

வி.கு

அலைத்தல்-தோற்கடித்தலுமாம், அதுகொல்லேறு தழுவலுக்கு அலைத்தல். அது இன்று மஞ்சுவிரட்டு எனப்படும்: ஆங்கு-அம்முதுகு குறித்தது. வான்கொடி-மேகம் முட்டும்கொடியுமாம்.அமுதவல்லி, சுந்தரவல்லியரே பின்னர் தேவயானை வள்ளி நாயகியராகி முருகப் பெருமானை அடைந்தமை கந்தபுராணந்தந்தது. குடில்-இங்கு ஆலயங்குறித்தது

திருமால் குன்றெடுத்தவரலாறு: திருமால் ஆயர்பாடியில் கண்ணனாக அவதாரஞ் செய்த நாள்களில் இடையர்கள் இந்திரனுக்குச்செய்யும் பூஜையை விடுத்து அதனைக்கண்ணனுக்குச் செய்யத் தொடங்கினர். அதனாற் சினங்கொண்ட இந்திரன் கல் மழையைப் பொழிவித்தான். அதனால் வருந்திய ஆயர் கண்ணனை வேண்டினர். கண்ணன் கோவர்த்தன மலையை அடியோடும் பறித்தெடுத்துக் குடைபோலத் தாங்கி ஏழுநாள் பெய்த கல்மழையைத்தடுத்து ஆயரையும் பசுக்களையும் காத்தருளினான். கிரவுஞ்சக்கேடு தாரகன்வதையோடு சம்பந்தப்பட்டது. (2)

*கோணலிலா நெஞ்சினருங் கூட்டளிசெய் தேனிசையுஞ்*
*சேணரம்பைக் காட்சிபெறுஞ் செந்தூரே-மாணக்*
*கமலத்தா னத்தன் கருத்தழித்தான் றாளாங்*
*கமலத்தா னத்தன் களம்.*

ப-ரை

கோணல் இலா நெஞ்சினரும்-கோட்டம் இல்லாத இதயத்தினரும், சேணர் அம்பை காட்சிபெறும்-தேவரதும் அம்பிகையினதும் கோலத்தைக் கொள்ளும், செந்தூரே, கூட்டு அளி செய்தேன் இசையும்-தேன்கூட்டும் வண்டுகள் தோற்றுவிக்கும் தேன்போலும் ஒலியும், சேண் நரம்பு ஐ காட்சி பெறும்-நீண்ட யாழ் நரம்புகளின் அழகிய தன்மையைக்கொள்ளும், செந்தூரே-, மாண் அ கமல தானத்தன் கருத்து அழித்தான்-மாட்சிமைபொருந்திய அழகிய தாமரை இடத்தவனாகிய பிரமனது அகந்தைக்கருத்தை அழித்தவரும், தாள் ஆம் கமலத்தான்-திருவடிகளாகிய தாமரைகளை உடையவரும், அத்தன்-கடவுளுமாகிய குமரனது, களம்-இடமாகும்.

வி.கு

நெஞ்சினர் இருபாலாருமாயினர், எனவே செந்தூரில் ஆண்கள் தேவரெனவும் பெண்கள் அம்பிகை எனவும் நிற்பர் என்பதாம். காட்சி-கோலம், தன்மை, அக்கமலம்-அந்தக்கமலமுமாம். இப்பொருளில் அகரம் பண்டறிசுட்டாம். தாளாம் கமலம்-உருவகம்.

(3)

*வன்னக் குருகிரவால் வான்மதகுப் பேரொழுக்கால்*
*தென்னந்தோப் புக்கிணையுஞ் செந்தூரே-துன்னுபெருங்*
*காமாட்சி மைந்தர் கருத்திருப்பார் காஞ்சியுறை*
*காமாட்சி மைந்தர் களம்.*

ப-ரை

இரவால் வன்ன குருகு-இரவின் வருகையால் அழகிய பறவைகள், தென்னம் தோப்புக்கு இணையும்-தென்னந்தோப்புக்களைச்சேரும், செந்தூரே; வான் மதகு பேர் ஒழுக்கால்-பெரிய மதகுகளின்றும் வரும் பெரியசலதாரைகளால், தென் நந்து ஓ புக்கு இணையும்-அழகுச்சங்குகள் மதகு நீர் தாங்கும் பலகைகளிடத்தே சென்று பொருந்தும், செந்தூரே-, துன்னு பெரும் காம ஆட்சி மைந்தர் கருத்து இருப்பார்-செறிந்த பெரிய ஆசைகளை அடக்கி அரசுபுரியும் வலியராகிய துறவியரது நினைப்பில் எழுந்தருளுபவரும், காஞ்சி உறை காமாட்சி மைந்தர்-கச்சிப்பதியில் அமர்ந்திருக்கும் காமாட்சிக்குப்புதல்வரும் ஆகிய செவ்வேளது, களம்-தானமாகும்.

வி.கு

வன்னம்-அழகோடு நிறமுந்தந்தது, குருகு-நாரை, கொக்கு எனினும் அமையும். ஓ-மதகில் இடப்படும் பலகை, இரவால், ஒழுக்கால் என்பன ஏதுப்பொருளன. (4)

மொட்டரும்புந் தேனமுதை மூவா தமிழ்மறையைச்
சிட்டருந்திப் பாடிவருஞ் செந்தூரே-வெட்டவெளிக்
கோலத்தன் சேயன் கொடிபரக்கும் வெஞ்சமர்க்காம்
கோலத்தன் சேயன் குடில்,

பா-ரை

மொட்டு அரும்பும் தேன் அமுதை-முகைகளில் முகிழ்க்கும் தேனாகிய அமுதத்தை, சிட்டு அருந்தி பாடு இவரும்-தேன்சிட்டுகள் உட்கொண்டு பக்கத்தே அமர்கின்ற, செந்தூரே-, மூவர் தமிழ் மறையை-தேவார முதலியராகிய மூவர் பாடிய தமிழ்வேதத்தை, சிட்டர் உந்தி பாடிவரும்-ஞானியராயினோர் எழுச்சி கொண்டு ஓதிவருகின்ற, செந்தூரே-, வெட்டவெளி கோலத்தன் சேயன்-சிதாகாசவடிவினராகிய சிவனுக்குச்சிறுமகனும், கொடி பரக்கும் வெம் சமர்க்கு ஆம் கோல் அத்தன்-காகங்கள் பரந்து வரும் கொடிய போர்க்காகிய அம்புகளைச்சுமக்கும் செல்வரும், சேயன்-செவ்வணத்தருமாகிய முருகனது, குடில்-இல்லமாகும்.

வி.கு

தேனமுதை சிட்டு அருந்தி பாடிவரும் எனவும் கூட்டுக. மூவர்-காரண இடுகுறிப்பெயர், வெட்டவெளி-வெறும்வெளியாகிய சிதாகாசம், அத்தன்-செல்வன், கடவுளுமாம். (5)

*கொவ்வையிதழ்க் கோதையரைக் கொண்கருநீ ளம்பலுமே*
*செவ்வனமாய்க் கண்டுவக்குஞ் செந்தூரே-அவ்வையெனும்*
*ஆறுபடை வீட்டா னருணைத் தலத்தனுயர்*
*ஆறுபடை வீட்டா னகம்.*

ப-ரை

கொவ்வை இதழ் கோதையரை- கோவைப் பழம் போலும் அதரமுடைய தம்மனைவியராகிய மகளிரை, கொண்கரும்-அவர்தம் கணவன்மாரும், செவ் அனம் ஆய் கண்டு உவக்கும்-செந்நிற அன்னங்களாகக் கண்டு மகிழும், செந்தூரே; நீள் ஆம்பலும் செவ் வனம் ஆய் கண் துவக்கும்-தூரத்தே தோன்றும் ஆம்பல் மலர்களும், செங்காடாய்ப்பார்ப்போர் கண்களைப்பிணிக்கும், செந்தூரே-, அவ்வை எனும் ஆறு படை வீட்டான்-தாய் என்று பேசப்படும் கங்காநதி தோற்றுவித்த கமல வீட்டினையுடையவரும், அருணை. தலத்தன்-திருவருணைக் கோயிலரும், உயர் ஆறுபடை வீட்டான்-மேம்பட்ட அறுவகைப்படைவீடுகளை யுடையவருமாகிய சண்முகனது, அகம்-இல்லமாகும்.

வி.கு

மனைவியர் நடை அன்னநடையாய் இருத்தலின் செவ்வனமாய்க் காண்கின்றனர் என்பதாம். நீள் ஆம்பல்-பரந்துகிடக்கும் ஆம்பலுமாம், ஆம்பல் செந்நிறத்தது, அதனால் அது செங்காடாயிற்று. குழந்தை முருகனை வளர்த்தமை கங்கையைத்தாயாக்கியது. திருவருணை அருணகிரிநாதரை ஆட்கொண்டதலம், ஆறுபடைவீடுகள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் (சீரலைவாய்), திருவாவினன்குடி (பழனி), திருவேரகம் (சுவாமிமலை) குன்றுதோறாடல் (திருத்தணி) பழமுதிர்ச்சோலை (அழகர்கோயில்), படைவீட்டான்-ஆயுதசாலைக்குரியவன் அல்லது பாசறைக்குரியவன் என்பது பொருள். (6)

*ஓங்கு மலர்ச்செறுவி லோதுங் கழகமதில்*
*தேங்கா வியந்தேறுஞ் செந்தூரே-யேங்கவந்த*
*பன்னிரண்டு கையர் பதிசிதைத்தவ் வான்காத்த*
*பன்னிரண்டு கையர் பதி.*

ப-ரை

தேங்கு ஆ-நிறைந்த பசுக்கூட்டம், ஓங்கு மலர் செறுவில் வியந்து ஏறும்-உயர்ந்து வளர்ந்த பூக்களையுடைய வயல்களில் அதிசயத்துப்புகும், செந்தூரே-, ஓதும் கழகம் அதில்-கல்வி பயிலும் இடங்களில், தேம் காவியம் தேறும்-இனிய காப்பியங்களைத் தெளிகின்ற, செந்தூரே-, ஏங்க வரும்-அஞ்சும்படிவந்த, பன் இரண்டு கையர் பதி சிதைத்து-வெறுத்துப்பேசப்படும் இரண்டு கீழ்மையரது நகரங்களை அழித்து, அ வான் காத்த-அந்தச்சுவர்க்க நாட்டைப் பாதுகாத்த,-பன்னிரண்டு கையர்-பன்னிரண்டு கரங்கள் உள்ளவராகிய முருகப் பெருமானது, பதி-தலமாகும்.

வி.கு

இரண்டு கையர்-தாரகன், சூரபன்மன் என்போர், பதி-முறையே மாயா புரி மகேந்திராபுரி என்பன. சிங்கமுகாசுரன்பதி ஆசுரம், அது முருகனால் அழிக்கப்படாது அவன் அழியவே அதுவும் தானே அழிந்தமை கந்த புராணந்தரும் செய்தி. வான்-இடவாகுபெயர். (7)

*ஆயிழையா ராடலில்வெவ் வாதபம்போந் தண்பொழிலிற்*
*சேயிழையா ரங்கலையுஞ் செந்தூரே- வேயிசைக்கும்*
*மான்மருக னாதன் மயக்கறுப்பான் பொன்னுடல*
*மான்மருக னாதன் மனை.*

ப-ரை

ஆய் இழையார் ஆடலில்-ஆராய்ந்த ஆபரணங்களை அணிந்த மகளிரது விளையாட்டிலும், சேய் இழை ஆரம் கலையும்-சிவந்த அணிகளும் முத்து மாலைகளும் சிதையும், செந்தூரே-, வெவ் ஆதபம் போம் தண்பொழிலில்-வெப்ப வெயில் நீங்கிய குளிந்த சோலையின் கண்ணும், சேய் இழையார் அங்கு அலையும்-சிறுவர்களும் நகையணிந்த மகளிரும் அவ்விடத்தே அலைந்துலாவும், செந்தூரே-, வேய் இசைக்கும் மால் மருகன்-புல்லாங்குழலை ஊதும் திருமாலுக்கு மருகரும், ஆதன் மயக்கு அறுப்பான்-ஆன்மாக்களின் உலகமயக்கத்தைப்போக்குபவரும், பொன் உடல மான் மருகன்-பொன்போலும்சரீரம் உடையமானுக்கும் மருகனாய் நிற்பவரும், நாதன்-எங்கள் தலைவருமாகிய குமரனது, மனை-இல்லமாகும்.

வி.கு

தண் பொழிலுக்கு ஆதபம் போதல் காரணமாயிற்று. தண்பொழிலில் உலாவுதல் சிறுவரதும் மங்கையரதும் மென்மையைப் புலப்படுத்தியது. வேய்-ஆகுபெயர், மான்-வள்ளியை ஈன்றமான், திருமகளே மான்என்பது புராணக்கருத்து.

(8)

*கம்மியக்கன் னாரகத்துங் காதலடி யாரகத்துஞ்*
*செம்பரத்தி னோக்கமுறுஞ் செந்தூரே-தும்பிமுகன்*
*வள்ளிக்குக் காந்தன் மகிழ்துணைவன் பூங்கொடியாம்*
*வள்ளிக்குக் காந்தன் மனை.*

ப-ரை

கம்மியர் கன்னார் அகத்தும்-தொழிலாளராகிய கன்னாரது இல்லங்களிலும், செம்பு அரத்தின் ஒக்கம் உறும்- செப்புருவங்கள் அரத்தினால் உயர்வைப்பெறும், செந்தூரே-, காதல் அடியார் அகத்தும்-பக்தி நிறைந்த தொண்டரது நெஞ்சத்திலும், செம் பரத்தின் நோக்கம் உறும் - செப்பமான பரம்பொருளின் அருட்பார்வை வந்து பொருந்தும், செந்தூரே-, தும்பிமுகன்-யானைமுகத்தரும், வள் இக்கு காந்தன் -வளவிய கரும்பில் விருப்புடையவருமாகிய விநாயகப்பெருமான், மகிழ்துணைவன்- மகிழ்கின்ற தம்பியும், பூ கொடி ஆம் வள்ளிக்கு காந்தன்- மலர்க்கொடி போல்வாளாகிய வள்ளிநாயகியாருக்கு மணவாளனுமாகிய கந்தனது, மனை-இல்லமாகும்.

வி.கு

கம்-தொழில், கன்னார்-பஞ்சகம்மாளருள் ஒருபிரிவினர், பரத்தின் நோக்கம்- ஈண்டு அருட்பார்வை;

(9)

*தம்மிலத்துண் யோகியர்க்குஞ் சார்கொடிமா டத்தினுக்குஞ்*
*செம்புறவி னாடிவருஞ் செந்தூரே - பம்பும்*
*கடம்புத் தொடையன் ககனகூ டம்போழ்*
*கடம்புத் தொடையான் களம்.*

ப-ரை

தம் இலத்து உண் யோகியர்க்கும்-விருந்தளிப்போராகிய தமது இல்லங்களில் உண்ணுகின்ற துறவியர்க்கும், செம்பு உறவின் நாடி வரும்-வாய்பூசலுக்குரிய செம்பானது உறவினர் போல விரும்பிவருகின்ற, செந்தூரே-,சார் கொடி-அழகிய கொடிகள், மாடத்தினுக்கும் செம் புறவின் ஆடி வரும்-மாடங்களிலும் செவ்வண்ணப்புறாக்கள்போல அசைந்து வருகின்ற செந்தூரே-, பம்பும் கடம்பு தொடையன்-செறிந்த கடப்பமலர் மாலையை அணிபவரும், ககன கூடம் போழ்ஆகாய வெளியிலுள்ள உலகங்களைப்பிளக்கும், கடு அம்பு தொடையன்-விரைவுப்பாணங்களைப் பிரயோகிப்பவருமாகிய முருகனது, களம்-இடமாகும்.

வி.கு

யோகியர்க்கு மனைகள் இல்லாமையால் தம் இலம் விருந்தளிப்போர் இல்லமாம். செம்பு-முதற்கண் வாய்பூசக்கொடுக்கும் செப்புக்கலசம். வாய்பூசல்- வாய் கொப்பளித்தல். செம்புறவு-இல்பொருளுவமை, அன்றி, செப்பமான புறாக்களுமாம், ககனகூடம்-சூரபன்மனது ஆயிரத்தெட்டு அண்டங்கள் குறித்தது.

(10)

*பானற் பழனத்தும் பன்மதலைக் கூம்பகத்துஞ்*
*சேனந்திக் காடிவருஞ் செந்தூரே - ஏனற்*
*கதிர்காம னத்தன் கருதுகதிர் காமன்*
*கதிர்காம னத்தன் களம்.*

ப-ரை

பானல் பழனத்தும்-கருங்குவளைகளுள்ள வயல்களிலும், சேல்நந்து இக்கு ஆடிவரும்-சேல் மீன்களும் சங்குகளும் கரும்புகளைத் தீண்டி ஆடிவருகின்ற, செந்தூரே-, பல் மதலை கூம்பகத்தும்-பல மரக்கலங்களின் பாய்மரநுனிகளிலும், சேனம் திக்கு ஆடிவரும்- பருந்துகள் திசைகள் தோறும் சென்று அசைந்து வருகின்ற, செந்தூரே-, ஏனல் கதிர் கா மன் நத்தன் கருது-தினைக்கதிர்களைக்காவும் நம்பியரசனும் சங்கேந்திய திருமாலும் நினைக்கின்ற, கதிர்காமன் கதிர்காமத்தலத்தவரும், கதிர் கா மனத்தன்-ஒளிர்கின்ற காவடிக்காம் மனத்தை உடையவருமாகிய குமரனது, களம்-தானமாகும்.

வி.கு

பன் மதலை-விதந்து பேசும் மரக்கலங்கள் எனவும் நின்றது. நம்பி திருமால் என்னும் இருவரதும் நினைப்பு மருகன் எனக்கொண்ட பெருமித நினைப்பு கா-காவடி, கதிர்காமனத்தன் என்பதை கதிர் காமன் அத்தன் எனப்பிரித்து மன்மதனுக்கும் கடவுள் எனப்பொருள் கொள்வதும் அமையும் கதிர்கா-வினைத்தொகை. (11)

*போராடற் காளையரும் பூங்குயிலா ரின்னிசையும்*
*தேரார்ப் பழித்தோட்டுஞ் செந்தூரே- நேராதாட்*
*காப்பரண கத்தன் கடுவினையேற் கென்றுமொரு*
*காப்பரண கத்தன் களம்.*

ப-ரை

போர் ஆடல் காளையரும்-போரில் வெற்றி பெறும் காளையொக்கும் வீரரும், தேரார் பழித்து ஓட்டும்-பகைவரை நிந்தை செய்துவிரட்டும், செந்தூரே-, பூ குயிலார் இன் இசையும் - அழகிய குயிலொப்பாராகிய மகளிரது இனியகீதமும், தேர் ஆர்ப்பு அழித்து ஓட்டும்-தேர்களின் பேரொலியை இன்மை செய்துநீக்கும், செந்தூரே-, நேராதாள்-முதற்கண் உடன்படாதவளாகிய வள்ளிநாயகியாரின், கா பரண் அகத்தன்-காவலுக்கமைத்த பரணிடமாக நின்றவரும், கடு வினையேற்கு-கொடிய தீவினையேனுக்கு, என்றும் ஒரு காப்பு அரண் நகத்தன்-எக்காலத்தும் ஒப்பற்ற காவல் வேலியாகிய மலைபோல்வருமாகிய குகனது, களம்-இடமாகும்.

வி.கு

போர் ஆடல் காளையர்-போரை விளையாட்டாகக் கொள்ளும் காளையர் எனினும் ஒக்கும், குயிலார்-இசையாற்குயிலொத்தவர், கா பரண் சோலைக் கண்ணுள்ள பரணுமாம். (12)

*நவ்விவிழி யார்குழலில் நந்தர் செழுமனையில்*
*செவ்வந்திக் கானாறுஞ் செந்தூரே-பவ்வஞ்சூழ்*
*மண்டமர்க் காவலான் வஞ்சினத்தன் நேர்வந்த*
*மண்டமர்க் காவலான் மன்று.*

ப-ரை

நவ்வி விழியார் குழலில்-மான்போலும் கண்ணினராகிய மகளிரது கூந்தலிலும், செவ்வந்தி கான் நாறும்-வெவ்வந்திமலர்வாசனை பரிமளிக்கும், செந்தூரே-, நந்தர் செழு மனையில்-இடையரது வளவிய இல்லங்களிலும், செவ் அந்திக்கு ஆன் நாறும்-சிவந்த மாலைக்காலத்தில் பசுக்கள் தோன்றி நிற்கும், செந்தூரே-, பவ்வம் சூழ் மண் தமர் காவலான்-கடல்சூழ்ந்த பூமியிலுள்ள உறவினர் ஆகிய அசுரரைக்காத்து நின்றவனும், வஞ்சினத்தன்-கடுஞ்சினத்தனுமாகிய சூரபன்மன், நேர் வந்த-எதிரேற்றுவந்த, மண்டு அமர்க்கு ஆவலான் - செறிந்த போரில் பெருவிருப்புற்று நின்றவராகிய முருகனது, மன்று- சபையாகும்.

வி.கு

காவலான்- அரசனுமாம், வஞ்சினம்- சூளுறவு எனவும் நின்றது. மன்று ஈண்டு தேவசபை, அந்திக்கு, தமர்க்கு என்பன உருபுமயக்கங்கள். (13)

*பாசமற்றார் கந்தரத்திற் பல்சாத்தை நீள்கரையில்*
*தேசக் கலங்கவருஞ் செந்தூரே - நேச*
*வனலத் துதிக்கைய னாதிசிவ னாட்ட*
*வனலத் துதிக்கைய னாட்டு*

ப-ரை

. பாசம் அற்றார் கந்தரத்தில் -பற்று அறுத்தாராகிய துறவியரது கழுத்துக்களிலும். தேச அக்கு அலங்க வரும் - அழகுபடைத்த உருத்திராக்க மாலைகள் விளங்கும்படியாக வருகின்ற, செந்தூரே-, பல் சாத்தை-பல வணிகக்கூட்டங்களை, நீள் கரையில் தேச கலம் கவரும்- நீண்ட கடற்கரையிள்ள பிற நாட்டுக்கப்பல்கள் கவர்ந்திழுக்கும், செந்தூரே-, நேச அனலம் துதிக்கு ஐயன்-பக்தியுடைய அக்கினி தேவனது போற்றுதலுக்குரியவரும், ஆதி சிவன் நாட்ட அனலத்து உதிக்கையன் - மூலவராகிய சிவனது நெற்றிக் கண்ணாகிய அக்கினிப்பொறியில் தோற்று தலையுடையவருமாகிய சண்முகனது, ஆட்டு - திருவிளையாடல்களுக்குரிய தலமாகும்.

வி.கு

தேசு அக்கு- பொன் இணைந்த உருத்திராக்கமுமாம். அது கௌரிசங்கம், தேசு-பொன், கவர்தல்-அழைத்தல் எனினும் ஒக்கும், ஆறு அக்கினிப் பொறிகளைத் சுமந்தும் முருகன் தேரில் கொடியாயும் நின்றமையின் அக்கினிதேவனது நேசம்புலப்பட்டவாறாம். ஆட்டு- ஈண்டுதலம் குறித்தது. (14)

*நந்தாக் கொடையினரை நத்தவயற் கொக்கினத்தைச்*
*சிந்தா மணியேய்க்குஞ் செந்தூரே - கொந்தார*
*மாய வளன்புரியான் மாயக் களனின்றான்*
*மாய வளன்புரியான் வாக்கு.*

ப-ரை

நந்தா கொடையினரை - குறையாத கொடையாளர்களை, சிந்தாமணி ஏய்க்கும் - வேண்டியவெல்லாம் கொடுக்கும் தெய்வமணி தழுவிக் கொள்ளும், செந்தூரே-,நத்தம் வயல் கொக்கு இனத்தை -சங்குகள் ஊரும் வயல்களில் உலாவும் கொக்குக்கூட்டங்களை, மணி சிந்தா ஏய்க்கும்- சங்குகளது முத்து மணிகள் சிதைந்து ஏமாற்றும், செந்தூரே-, கொந்து ஆரமாயவள் அன்பு உரியான் மாய-பூங்கொத்தாலாய மாலை அணிந்த மாயவளது அன்புக்கு உரிமைபூண்டவனாகிய சூரபன்மன் இறக்குமாறு, களன் நின்றான்- போர்க்களத்தே எதிர்நின்றவரும், மாய வளன் புரியான்-மாயா சம்பந்தமான செல்வங்களை விரும்பாதவருமாகிய குமரனது, வாக்கு- செல்வாக்கமைந்த தானமாகும்.

வி.கு

சிந்தாமணி சுவர்க்கத்துள்ள தெய்வமணி, தழுவல்-கொடையொற்று மையால் தழுவல், மணி- முத்தன்றிப்பிறமணிகளுமாம். ஏய்த்தல்-மணிகளை இரையென்று விழுங்கிக் கக்கச் செய்தல் புரிதல்- விரும்புதல், சிந்தா- செய்யா என்னும்வாய்பாடு.

(15)

*வென்றியாழ்ப் பாணரதும் வீங்குதன மாதரதுந்*
*தென்றிக் கிடையசையுஞ் செந்தூரே - என்றுயரம்*
*ஆறக் கரத்தா னபயமளித் தான்போற்றும்*
*ஆறக் கரத்தா னகம்,*

ப-ரை

வெற்றி யாழ்ப்பாணரதும் தென்-வெற்றிவாய்ந்த யாழ்வாசிக்கும் பாணர்களது இசையானது, திக்கு இடை அசையும்- எல்லாத்திசைகளிலும் தங்கப்பெறும், செந்தூரே-, வீங்கு தன மாதரதும் இடை- பூரித்த தனங்களமைந்த பெண்களது இடையும், தென்றிக்கு அசையும்-தென்திசைக் காற்றுக்கும் நுடங்குகின்ற, செந்தூரே-, என் துயரம் ஆற- என்துன்பங்கள் தணியுமாறு, கரத்தான் அபயம் அளித்தான்- திருக்கரத்தினால் அபயம் தந்தவரும், போற்றும் ஆறு அக்கரத்தான்-யாவராலும் துதிக்கப்பெறும் சடாட்சரனுமாகிய குருபரனது, அகம்-இல்லமாகும்.

வி.கு

இசை திக்கனைத்திலும் தங்குவதற்கு வென்றி ஏதுவாயிற்று. அது போல மாதரிடைநுடங்க வீங்குதனமும்நின்றது. கரத்தான்-மூன்றாம்வேற்றுமை ஆன் உருபு ஏற்றது. தென்-இசை (16)

## மும்மொழிச்சிலேடை

*கண்ணியரும் வாதுவருங் காருலவு மாளிகையுஞ்*
*செண்டாடிக் கண்மலர்த்துஞ் செந்தூரே-ஒண்டாலி*
*கந்தரத்துக் கட்டினான் கானவட்குந் தண்ணளியைக்*
*கந்தரத்துக் கட்டினான் காப்பு.*

ப-ரை

கண்ணியரும்-கோதையராகிய மகளிரும், செண்டு ஆடி கண் மலர்த்தும்-பந்தாடி அழகை மலரச்செய்யும் செந்தூரே-, வாதுவரும்-இராவுத்தர்களும், செண்டு ஆடி கண் மலர்த்தும்-வையாளி வீதியில் ஆடல் செய்து கண்களை விரித்துப் பார்க்கும், செந்தூரே-, கார் உலவு மாளிகையும்-மேகங்கள் உலாவருகின்ற மாடவீடுகளும், செண்டு ஆடி கண் மலர்த்தும்-பூச்செண்டு கண்ணாடி என்பவற்றின் அழகைப்பரக்கச் செய்யும், செந்தூரே-, கானவட்கும் ஒள்தாலி கந்தரத்து கட்டினான்- குறப்பெண்ணாகிய வள்ளிக்கும் ஒளிவீசும் மங்கல நாணைக்கழுத்தில் கட்டிக்கொண்டவரும், தண் அளியை-குளிர்ந்த திருவருளை, கம் தரத்துக்கு அட்டினான்-கார் மேகத்தின் தகுதியளவாகச்சொரிந்து வார்த்தவருமாகிய முருகப்பெருமானது, காப்பு-காவலமைந்த இடமாகும்.

வி.கு

கண்ணி -மாலை-, வாதுவர்-குதிரைப்பாகராகிய இராவுத்தர், (17)

*சார்மடைகா ணோடையினற் சங்காழி நீள்கரையிற்*
*சேர்புளினம் பாடிவருஞ் செந்தூரே-சூர்மாப்*
*புதுமைக் கிழவன் புனத்தினைமா வுண்ட*
*புதுமைக் கிழவன் புகல்*

ப-ரை

சார் மடை காண் ஓடையில் சேர் புள்-அழகிய மடைமுகங்கள் தோன்றும் நீரோடைகளைச் சேர்கின்ற பறவைகள், இன் அம்பு ஆடி வரும்-இனிய நீரில் நீராடி வருகின்ற, செந்தூரே-, ஆழி நீள் கரையில் சேர் நல் சங்கு-சமுத்திரத்தின் நீண்ட கரையைச் சேர்ந்த நல்ல சங்குகளும், புளினம் பாடு இவரும்-மணல்மேடு அதன்பக்கம் என்பவற்றில் ஊர்ந்து ஏறும், செந்தூரே-, சூர் மா புது மை கிழவன்-அச்சந்தருவதும் பெரியதும் புதியதுமாகிய ஆட்டுக்கடாவுக்கு உரிமை உடையவரும், புன தினை மா உண்ட புதுமை கிழவன்-மலைசார்ந்த கொல்லையில் தினைமாவை அருந்திய புதிய முதியோனுமாகிய அறுமுகனது, புகல்-இருப்பிடமாகும்.

வி.கு

சார் மடை-வயல்சார்ந்த மடையுமாம், மடை-வாய்க்கால்தோறும் இடப்படும்நீரணை, சேர் புள் இனம் பாடிவரும் எனவும் கொள்க. மை-ஆடு, அது நாரதர் யாகத்தில் தோன்றிப் பேரழிவு செய்தபோது முருகன் கட்டளைப் படி வீரவாகுதேவரால் அடக்கப் பெற்றுக்கொண்டு வரப்பட்ட ஆடாம். புதுமைக்கிழவன் - விருந்தாகவந்த முதியவனுமாம். (18)

*காவார் வளாகமெங்குங் கண்ணுதலோன் வீதியெங்குந்*
*தேவாரம் பாடிமகிழ் செந்தூரே - நாவார்*
*குமரிக்கா வாடினான் கொல்லைப் புறத்தே*
*குமரிக்கா வாடினான் கூத்து.*

ப-ரை

கா ஆர் வளாகம் எங்கும்-சோலைகள் நிறைந்த அயலிடங்கள் எவ்விடத்தும், தே ஆர் அம்பு ஆடிமகிழ்-கடவுளர், நிறைந்த நீர் நிலைகளில் தீர்த்தமாடி மகிழும், செந்தூரே-, கண் நுதலோன் வீதி எங்கும்- நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது ஆலயவீதிகள் எவ்விடத்தும், தேவாரம் பாடிமகிழ்-தேவாரத்திருமுறையைப் பக்தர் பாடி மகிழும், செந்தூரே-, நா ஆர் குமரி கா ஆடினான்-பொலிவுநிறைந்த இளமரச் சோலையில் திருவிளையாடலைச் செய்தவரும், கொல்லை புறத்தே-தினைக்கொல்லைப்பக்கமாக, குமரிக்கா வாடினான்-இளமையளாகிய வள்ளிநாயகியார் பொருட்டு வாடிநின்றவருமாகிய செவ்வேளது, கூத்து-அருள்நடத்துக்குரிய இடமாகும்.

வி.கு

கடவுளரது தீர்த்தமகிழ்ச்சி மக்கள் மகிழ்ச்சி எனக்கொள்க. தேவாரம் எனவே பிறதிருமுறைகளும் பாடியவாறாம். குமரிக்கா ஆடியது குமரனது பாலலீலைகள் பலவற்றுள் ஒன்றாகும். லீலைகளின் விரிவைக்கந்தபுராணத்துத் திருவிளையாட்டுப் படலத்துக்காண்க குமரிக்கு ஆ என்பது ஈது குறைந்தது.

(19)

*மோதா வருந்திரையின் மூரனகை யார்முடியிற்*
*சேதாம்ப லாரமுறுஞ் செந்தூரே-போதாடும்*
*வல்லிதே யத்தொட்டான் வாழ்வழித்தா னஞ்சத்தன்*
*வல்லிதே யத்தொட்டான் வாக்கு.*

ப-ரை

மோதா வரும் திரையில்-மோதி வருகின்ற அலைகளில், சேது ஆம் பல் ஆரம் உறும்-சேதுக்கரையிலும் தோன்றிய பல முத்துகள் வந்து கூடும், செந்தூரே-, மூரல் நகையார் முடியில்-புன்சிரிப்பினராய பெண்களது கொண்டையிலும், சேதாம்பல் ஆரம் உறும்-செவ்வாம்பல் மலர்மாலைகள் இணையும், செந்தூரே-, போது ஆடும் வல்லி தேயத்து ஒட்டான் வாழ்வு அழித்தான்-மலர்கள் அசைகின்ற கற்பகக்கொடிக்குரிய தேவலோகத்துடன் இணங்காதவனாகிய சூரபன்மனது வாணாளை இன்மை செய்தவரும், அஞ்சத்தன் வல்லி தேய தொட்டான்-பிரமதேவரது கால்விலங்கு சிதையத் திருக்கரந் தீண்டியவருமான முருகனது, வாக்கு-செல்வாக்கமைந்த இடமாகும்.

வி.கு

சேது முத்துகள் செந்தூரரையடைகின்றன. காரணம் நீரோட்டமே. சேது-இராமேஸ்வரம், வல்லி-காரண இடுகுறியாய்க் கற்பகக் கொடியைத் தழுவியது அஞ்சம்-அன்னம், அது பிரமதேவரின் வாகனமாம். வல்லி-தளை (20)

*ஈயவரு வோர்கதவு மீவோர் கொடைப்புகழுந்*
*தேயத் திருத்திவருஞ் செந்தூரே-தூயதொண்டர்*
*ஏரகத் தண்ண லெழில்வரதன் பூந்தளியாம்*
*ஏரகத் தண்ண லிருப்பு*

ப-ரை

ஈய வருவோர் கதவும்-கொடைவழங்க வருவோரது இல்லக்கதவுகளும், தேய திருத்தி வரும்-தேயுந்தோறும் செப்பஞ்செய்து வரப்பெறும், செந்தூரே-, ஈவோர் கொடை புகழும்-அவ்வாறு வழங்குவோரது வள்ளன்மையால் தோன்றிய கீர்த்தியும், தேயத்து இருத்தி வரும்- தேசந்தோறும் நிலைத்துவரும், செந்தூரே-, தூயதொண்டர் - இதயத்தூய்மை வாய்ந்த தம் அடியாரது, ஏர் அகத்து அண் நல் வரதன்-அழகிய நெஞ்சத்தை அண்மியிருக்கும் அழகுடைய வரமளிப்பவரும்,பூதளி ஆம் ஏரகத்து அண்ணல்-அழகிய ஆலயமாகிய திருவேரகத்தே எழுந்தருளியிருக்கும் தலைவருமாகிய கார்த்தியேனது, இருப்பு-இருப்பிடமாகும்.

வி.கு

ஈய்தல்-உயர்ந்தோருக்குரியது. அதனால் அங்குள்ளாரது உயர்வு புலனாயது, ஈகை பன்முறையும் பன்னாளும் பல்லாண்டும் நிகழ்தலின் கதவுகள் தேய்வனவாம், தேயத்து இருத்தி வரும் எனவே செந்தூரார் வண்மையை ஏற்பவர் பரதேசத்தவர் என்பது அருத்தாபத்தி, முருகன் தொழும்பருள்ளத்தே அண்மியிருத்தற்கு அவர்தம் தூய்மை ஏதுவாதலின் தூயதொண்டர் என்றார். வரதன் என்னாது எழில் வரதன் என்றமை ஏனையோர் வரங்களைத் தாழ்த்தி நின்றது. திருவேரகம்-சுவாமிமலை, அது ஆறு படைவீடுகளில் ஒன்று. (21)

*மாவடுகட் கன்னியர்க்கும் மல்குபெருஞ் சாந்திக்குந்*
*தேவத் தியானமெழுஞ் செந்தூரே-பாவஞ்சேர்*
*நான்மறைக்கு முள்ளத்த னாயேனை யாட்கொள்ளு*
*நான்மறைக்கு முள்ளத்த னட்பு*

ப-ரை

மா வடு கண் கன்னியர்க்கும்-மாம்பிஞ்சுபோலும் கண்களையுடைய இளஞ்சிறுமியர்க்கும், தேவ தியானம் எழும்-தெய்வ சிந்தனை தோன்றும், செந்தூரே-, மல்கு பெரும் சாந்திக்கும்- நிறைந்த திருவிழாக்களுக்கும், தே அத்தி யானம் எழும்-கடவுள், யானை மீதும் சிவிகைமீதும் எழுந்தருளும், செந்தூரே-, பாவம் சேர் நான் மறைக்கும் உள்ளத்தன் நாயேனை ஆள் கொள்ளும்-, தீவினையோடு இணைக்கின்ற ஆணவத்தால் மறைக்கப்படும் மனத்தவனும் நாயொப்பானுமாகிய என்னை அடிமைகொள்ளும், நால் மறைக்கும் உள் அத்தன்-நான்கு வேதங்களின் உட்பொருளாயிருக்கும் கடவுளாகிய சண்முகனது, நட்பு-நட்புக்குரிய தலமாகும்.

வி.கு

கன்னியர்க்கும் தியானம் எழும் என்பது அவர்க்குக்கருவில் தோன்றிய தியானத்தையும் அவர்தம் அன்னையர் தியானத்தையும் வெளிப்படுத்தியது. மாம்பிஞ்சு-நீள்பக்கமாய் வெட்டப்பெற்ற பாதிப்பிஞ்சு, பெருஞ்சாந்தி எப்போதும் எவ்விடத்தும் நிகழ்வது, அது மல்கு என்னும் அடைமொழியாற் பெறப்பட்டது. மறைப்பொருள் சிவமே என்பதைவேதப்பொருள்பாடி அப்பொருளாமாபாடி, என்பர் மாணிக்கவாசகர். (22)

*வேயடுதோ ளார்முகமும் வேறாங்கு காளையருஞ்*
*சீயம் புலிக்கேறுஞ் செந்தூரே-தாயமர்ந்த*
*கச்சிவந்த மாவடியான் கானத்தி கற்புனமே*
*கச்சிவந்த மாவடியான் காப்பு*

ப-ரை

வேய் அடு தோளார் முகமும்--மூங்கிலை வென்ற தோளினராய பெண்களது முகங்களும், *சீ* அம்புலிக்கு ஏறும்-ஒளியுடைய முழுமதியினும் உயரும், செந்தூரே-, வேல் தாங்கு காளையரும்-வேலினைக் கையிற் கொண்ட காளையொக்கும் வீரரும், சீயம் புலிக்கு ஏறும்-சிங்கத்தோடும் புலியோடும் மோதும், செந்தூரே-, தாய் அமர்ந்த- அன்னையாகிய காமாட்சி வீற்றிருக்கும், கச்சி வந்த மா அடியான்- காஞ்சிபுரத்துள்ள மாமர அடியில் எழுந்தருளியிருப்பவரும், கானத்தி கல் புனம் ஏக-குறமகளாகிய வள்ளி நாயகியாரது வள்ளிமலையில் உள்ளதினைக்கொல்லைக்குச் சென்றமையால், சிவந்த மா அடியான்-சிவப்புற்ற பெருமைவாய்ந்த திருவடிகளையுடையவருமாகிய கந்தவேளது, காப்பு-காவலமைந்த இடமாம்.

வி.கு

மகளிர் தோள்கள் மூங்கிலை அட்டவாறே முகங்களும் அம்புலியை அட்டவாறாம், காளையர் வீரத்துக்கு வேல் துணை நின்றமை தோன்ற வேல் தாங்குகாளையர் என்றார். அம்புலிக்கு, புலிக்கு என்பன உருபுமயக்கங்கள், ஏறுதல் உயர்தல், மோதுதல்.

(23)

***வீங்குந் தொறுநிரையும் வேளா ணுழவருமே
தேங்கரும்பா லைச்சொரியுஞ் செந்தூரே- பூங்காவான்
வான்வலத் தன்னீசன் வான்குறைநீத் தான்குமரன்
வானவலத் தன்னீசன் வாக்கு.***

ப-ரை

வீங்கும் தொறுநிரையும்-பருத்த பசுக்கூட்ட அணிகளும், தேங்கு அரும் பாலை சொரியும்- நிறைந்த அரிய பாலைச்சிந்துகின்ற, செந்தூரே-, வேளாண் உழவரும்-பயிர்த்தொழிலாளராகிய உழவரும், தேம் கரும்பு ஆலை சொரியும்-இனிய கரும்புகளைக் கரும்பாலைகளில் மிகக்கொடுக்கின்ற, செந்தூரே-, பூ காவான்-கற்பகச்சோலையை யுடையவனும், வான் அவலத்தன்-நீண்ட வேதனையுடையவனும், ஈசன்-தேவர்களுக்கு வேந்தனுமாகிய இந்திரனது, வான் குறை நீத்தான்-நெடுநாட்குறைகளைப்போக்கியவனும், குமரன்- என்றும் இளமையோனும், வான வலத்தன்-ஆகாயவழியில் வலம் வந்தவனும், ஈசன்-இறைவனுமாகிய முருகனது, வாக்கு-செல்வாக்குக்குரிய தலமாகும்.

வி.கு

தொறுநிரை-இருபெயரொட்டாயும் நின்றது. வேளாண் உழவர்-உபகாரஞ்செய்யும் உழவருமாம், வேளாண்மை-உபகாரஞ்செய்தல், ஆலைச் சொரிதல்-யானைகளுக்குச் சொரிதலுமாம், காரணம் கரும்புமிகுதியே; ஆலை-யானை, வான்குறை-சுவர்க்கநாட்டுக்குறைகள் எனினும் ஒக்கும், வான் வழியில் வலம் வந்தமை சிவன் உடனாய்நிற்கும் தடத்தம் காட்டியவாறாம். (24)

*சென்மங் கழிக்குநருஞ் செய்யார் குருகினமுஞ்*
*சின்முத் திரைகொள்ளுஞ் செந்தூரே - கன்மப்*
*பரங்குன்றத் தேற்றினான் பாவியனைப் பாதம்*
*பரங்குன்றத் தேற்றினான் பற்று,*

ப-ரை

. சென்மம் கழிக்குநரும்-பிறப்பொழிக்குந்துறவியரும், சின்முத்திரை கொள்ளும்-ஞானமுத்திரையைத்தம் கரத்தே கொண்டிருக்கும், செந்தூரே-, செய் ஆர் குருகு இனமும்-வயல்களில் நிறையும் பறவைக்கூட்டங்களும், சில் முத்து இரை கொள்ளும்-சில முத்துக்களை இரையாகக்கொள்ளும், செந்தூரே-, கன்ம பரம் குன்ற பாவியனை தேற்றினான்-தீவினையாகிய சுமை குறையுமாறு தீவினையனாகிய என்னைத் தெளிவித்தவரும், பாதம் பரங்குன்றத்து ஏற்றினான்- தமது திருவடிகளைத் திருப்பரங்குன்றத்தலத்தே இட்ட வருமாகிய குகப் பெருமானது, பற்று-வாரப்பாடுள்ளதலமாம்.

வி.கு

கன்மம்-தீவினையாகிய பழவினை, பாதம் பரங்குன்றத்தேற்றியது தெய்வயானை திருமணப் பொருட்டாம். பரங்குன்றம்-மேலானகுன்றம். அது முருகனது திருமணம் நிகழ்ந்தமையால் மேலாய் நிற்கின்றது. (25)

*கொத்துக் கொடியினமுங் கோலக்குவளைக்களுஞ்*
*சித்திரத்தேர்க் கூம்பிவருஞ் செந்தூரே-மத்தமுற்ற*
*தாரகனை யத்தன் சமரவேற் குண்டிசெய்தான்*
*தாரகனை யத்தன் றலம்.*

ப-ரை

கொத்து கொடி இனமும்-தொகுதியான துவச வகைகளும், சித்திர தேர் கூம்பு இவரும்-அலங்காரத்தேர்களின் கொடிஞ்சிகளில் உயர்ந்திருக்கும், செந்தூரே-, கோல குவளைகளும்-அழகிய ஆம்பல் மலர்களும், சித்திரத்து ஏர்க்கு ஊம்பிவரும்-அழகுக்கலப்பைகளுக்கு வணங்கி வருகின்ற, செந்தூரே-, மத்தம் உற்ற தாரகன் நைய-மனமயக்க முற்றிருந்த தாரகாசுரன் வருந்துமாறு, தன் சமர வேற்கு உண்டி செய்தான்- தனது போர்ப்படையாகிய வேலுக்கு உணவாக்கியவரும், தாரகன்-யாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவரும், ஐ அத்தன்-அழகிய குருவாய் இருந்தவருமாகிய முருகனது, தலம்-திருக்கோயிலாகும்.

வி.கு

கொடிஞ்சி-தேரின் முற்புற உறுப்பு, கோலக்குவளை-வண்ண வேறுபாடுடைய பல குவளைகளுமாகும். சித்திரத்து ஏர் கூம்பிவரும் எனவும் பகுத்து அழகுக்கலப்பைகளால் ஒடுங்கியும் குவிந்தும் வரும் எனவும் பொருள் கொள்க. ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலக்குறிகளாக முறையே சூரபன்மன், சிங்முகாசுரன், தாரகன் என்னும் மூவரையும் கொள்ளுதல் கந்தபுராணந்தரும் தத்துவப்பொருளாம். அந்தவகையால் மத்தம் என்பது மாயாமலமாகிய மத்தம் என நின்றவாறாம். அத்தன்-குரு, அதுசிவகுருவை நினைவு செய்தது.

(26)

*சோம்பலிலா வேத்தவையும் தூதுவிடு மங்கையருந்*
*தேம்பா லனமேவுஞ் செந்தூரே-ஓம்பிவரும்*
*ஆகமங்க டந்தா னடல்வேலான் பல்லுயிர்க்கும்*
*ஆகமங்க டந்தா னகம்.*

ப-ரை

.சோம்பல் இலா வேத்து அவையும் - மடியில்லாத அரசசபையும், தேம் பாலனம் மேவும் - இனிய பாதுகாப்போடு பொருந்தும், செந்தூரே-, தூது விடு மங்கையரும்-காதலரிடத்துத் தஞ்செய்தியை விடுக்கின்ற மங்கைப் பருவப்பெண்களும், தேம் பால் அனம் ஏவும்-இனிய பால்வண்ண அன்னங்களை ஏவிநிற்கும், செந்தூரே-, ஓம்பி வரும்-தொன்று தொட்டுப்பாதுகாத்து வருகின்ற, ஆகமம் கடந்தான்-ஆகமக் கருத்துக் களையும் கடந்துநிற்பவரும், அடல் வேலான்-வெற்றி வேலரும், பல் உயிர்க்கும் ஆ கமங்கள் தந்தான்- பலவாகிய சீவராசிகளுக்கும் ஆகவேண்டிய நிறைவுகளைத் தந்தருளியவருமாகிய செவ்வேட் பெருமானது, அகம்-இல்லமாகும்.

வி.கு

மடி-மந்தமும் சோர்வுஞ்சேர்ந்தநிலை, வேந்து-வேத்து என வலித்தது, பாலனம்-அரசசபைப்பாதுகாப்போடு நாட்டுப்பாதுகாப்பும் இணைந்து நின்றது.

(27)

*நாகமுத லாந்தருவு நாதன் விழவணியுஞ்*
*சேகண்டிக் கானஞ்சேர் செந்தூரே - மாகக்*
*குறத்தி மணாளன் குடிலைக் கருத்தன்*
*குறத்தி மணாளன் குடில்*

ப-ரை

நாகம் முதல் ஆம் தருவும்-புன்னை முதலாகிய விருட்சங்களும், சேகு அண்டி கானம் சேர்-வைரம் பொருந்தி நந்தவனத்தோடும் சேரும், செந்தூரே-, நாதன் விழவு அணியும்-இறைவனது திருவிழா அழகுகளும், சேகண்டி கானம் சேர்-சேமக்கலத்தின் இசையோடும் இணையும், செந்தூரே-, மாக குறு அத்தி மண் ஆளன்-தேவலோகத்துள்ள சிறிய தேவயானையின் நிலமாகிய சுவர்க்கபதியையும் அரசுசெய்பவரும், குடிலைக்கு அருத்தன்- பிரணவத்தின் உட்பொருளாய் இருப்பவரும், குறத்தி மணாளன்-குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியாருக்கு மாப்பிள்ளையுமாகிய கந்தேவேளது, குடில் இல்லமாகும்.

வி.கு

மண்-சீதனமண், குடிலைக்கு-உருபுமயக்கம். குறத்தி மண்ணையும் ஆள்பவன் எனவும் நின்றது.

(28)

*ஏணமைந்த கந்துகமு மின்மொழியார் மான்விழியுஞ்*
*சேணம் பரித்துயருஞ் செந்தூரே-யாணவத்தர்*
*தேராரன் மைந்தர் செருக்கழித்தார் பாறந்த*
*தேராரன் மைந்தர் செருக்கு.*

ப-ரை

ஏண் அமைந்த கந்துகமும்-வலிமை படைத்த குதிரைகளும், சேணம் பரித்து உயரும்-கல்லணையைத் தாங்கி உயர்ந்துதோன்றும், செந்தூரே-, இன் மொழியார் மான் விழியும்- இன்சொல்லியராகிய பெண்களது மான் போலும் விழிகளும், சேண் அம்பு அரித்து உயரும்-நீண்ட அம்புகளை அழித்து மேம்படுகின்ற,

செந்தூரே-, ஆணவத்தர்-அகங்காரத்தினரும், தேரார்-பகைவரும், அல் மைந்தர் இருளைவிரும்புவருமாகிய அசுரரை, செருகழித்தார்-போரில் ஒதுக்கியவரும், பால் தந்த தேர் ஆரல் மைந்தர்-பாலூட்டிய தெளிவுடைய கார்த்திகைப் பெண்களுக்கும் புதல்வருமாகிய கார்த்திகேயரது, செருக்கு-மிகு மகிழ்ச்சிக்குரிய தலமாகும்.

வி.கு

விழி சேண் அம்பு அரித்துஉயர்தல்-அம்பினும் வலிதாய்க்காளையரைத் தாக்கி உயர்தல், ஆணவத்தர் -இருண்மலத்தினருமாம், அல் மைந்தர்-நிசிசரர் என்னும் பொருட்டு, மைந்து-விருப்பம், செருக்கு அழித்தார் எனவும்கொள்க தேர்-முதனிலைத்தொழிற்பெயர், அது அறிவுத்தெளிவு. (29)

*விண்காம தேனுவையும் மீளவரு வார்தமையுந்*
*திண்ணாவாய்க் கண்டுவக்குஞ்செந்தூரே-தண்சுனைக்கே*
*வேதியனா வைத்தான் மிகநனைத்தான் மாணுருவும்*
*வேதியனா வைத்தான் விருப்பு.*

ப-ரை

விண் காமதேனுவையும்-சுவர்க்கத்துள்ள பசுவாகிய காமதேனுவையும், திண் ஆ வாய் கண்டு உவக்கும்-திண்ணிய பசுக்களிடத்தே பார்த்து மகிழும், செந்தூரே-, மீள வருவார்தமையும்- திரும்பவும் கடற்கரைக்கு வருவோரையும், திண் நாவாய் கண் துவக்கும்-திண்ணிய மரக்கலங்களின் அழகானது கட்டுண்டு நிற்கச்செய்யும், செந்தூரே-, தண்சுனைக்கு-

வள்ளி மலையிலுள்ள குளிர்ந்த ஊற்றில், வேது இயல் நாவை தான்-வெப்பம் இயன்ற நாவினையே, மிக நனைத்தான்-மிகவும் நனைத்துக்கொண்டவரும், மாண் உருவும்-மாட்சியமைந்த தன்வடிவத்தையும், வேதியன்ஆ வைத்தான்- அந்தணனாக வைத்துக்கொண்ட வருமாகிய செவ்வேளது, விருப்பு-விருப்பமைந்த இடமாம்.

வி.கு

காமதேனு-கேட்டவற்றை வழங்கும் தேவலோகப்பசு, அதுபோல் செந்தூர்ப்பசுக்களும் பாலை மிகுதியும் வழங்கி வேண்டும் செல்வங்களை வழங்குகின்றன என்பதாம். நாவாய் கண் துவக்கும்-கப்பல்களின் அழகு மீள வருவார்தமைத்தொடர்பு கொள்ளச்செய்யும் எனவும் நின்றது. துவக்கு-தொடர்பு, வேது இயல் நா-வறண்டநா, நாவை தான் என்பதில் தான் ஏகாரப்பொருள் தந்தது. சுனைக்கு-உருபுமயக்கம், வேதியன் ஆ-ஈறு குறைந்தது. (30)

*பொய்யா வளத்தினுக்கும் பொற்செந்நெற் போருக்குஞ்*
*செய்யா டிருக்கைதருஞ் செந்தூரே-மெய்யொளியன்*
*ஏறுமயில் வாக னிருளவுணர்த் தேய்த்தவயில்*
*ஏறுமயில் வாக னிருப்பு.*

ப-ரை

பொய்யா வளத்தினுக்கும்-என்றுமுள்ள செல்வவளத்துக்கும், செய்யாள் திரு கை தரும்-திருமகள் அழகுக்கரத்தை வழங்கும், செந்தூரே-, பொன் செந்நெல் போருக்கும்-அழகிய செந்நெற் குவியலுக்கும், செய் ஆடு இருக்கை தரும்-வயல்களில்

ஆடுகள் படுத்திருக்கப்பெறும், செந்தூரே-, மெய் ஒளியன்-திருமேனிப்பிரகாசத்தினரும், ஏறும் மயில் வாகன்-இவர்ந்து செல்லும் மயிலாகிய குதிரையை உடையவரும், இருள் அவுணர் தேய்த்த-கார்நிற அசுரர்களை அழித்த, அயில் ஏறும் அயில் வாகன்-கூர்மையால் உயர்ந்த வேல்தாங்கும் அழகருமாகிய முருகனது, இருப்பு-வாசஸ்தானம் ஆகும்.

வி.கு

செய்யாள் திருக்கை தருதல்-அபயந்தருதல், ஆடு இருக்கை தருதல்-கிடைகாட்டுதல், மெய் ஒளி-சூரிய சந்திரர்போலாகாது உண்மைஒளியோடும் இருத்தல் எனினும் ஒக்கும், வாகம்-குதிரை, இருள் அவுணர் இருளிலும் சஞ்சரிக்கும் அசுரர் எனவும் நின்றது, வாகு-புயமுமாம். (31)

*பெம்மான் புகழ்பாடிப் பீடளிக டேனாடிச்*
*செம்மகரந் தங்கவருஞ் செந்தூரே-அம்மா*
*மலைக்குறவ னானான் மடிதவழ்ந்தான் வள்ளி*
*மலைக்குறவ னானான் மனை.*

ப-ரை

செம் மகரம்-செப்பமான சுறாக்கள், பெம்மான் புகழ்பாடி தங்க வரும்-முருகப்பெருமானது கீர்த்திகளைப் பாடித்தங்கும் பொருட்டு வருகின்ற, செந்தூரே-, பீடு அளிகள் தேன் ஆடி-பெருமைக்குரிய வண்டுகள் தேனில் நீராடி, செம் மகரந்தம் கவரும்-சிவந்த பூந்தாதைக் கொண்டு செல்லும், செந்தூரே-, அ மா மலைக்கு உறவன்-அந்தப் பெருமைக்குரிய கயிலை மலையுடன் நட்புக்கொண்டிருப்பவரும், ஆனான்

இடபவாகனருமாகிய சிவபெருமானது, மடி தவழ்ந்தான்-மடியில் தவழ்ந்தவரும், வள்ளி மலை குறவன் ஆனான்-வள்ளிமலையில் உலாவிய குறவனுமாகிய கந்தனது, மனை-இல்லமாகும்.

வி.கு

செம்மகரம்-சிவந்தசுறா, செம்மீன் எனினும் அமையும், பீடு-செந்தூரில் தேன் ஆடும்பெருமை, தேன் நாடி எனவும் கொள்க, அ. மாமலை என்பதில் அகரம் பண்டறிசுட்டு, (32)

*கம்பீரக் கன்னாருங் கைவன்மைக் காருகருஞ்*
*செம்பட்டுக் கோடிகஞ்செய் செந்தூரே -தெம்முனையில்*
*அத்திக் குவைத்தா னவனோடுங் கூரயிலை*
*அத்திக் குவைத்தா னகம்*

ப-ரை

கம்பீர கன்னாரும்-ஆழ்ந்த அறிவுபடைத்த செப்புத்தொழிலாளரும், செம்பு அட்டு கோடிகம் செய்-செம்பை உருக்கியழித்துப்பூந்தட்டுக்களைச் செய்யும், செந்தூரே-, கை வன்மை காருகரும்-கைத்திறமையுள்ள நெய்வோரும், செம்பட்டு கோடிகம் செய்-சிவந்த பாட்டாடைகளை நெயவு செய்யும், செந்தூரே-, தெம் முனையில்-போர் முனையில், அத்தி குவை தானவனோடும்-யானைக்கூட்டமாகிய படையுடைய அசுரனாகிய சூரபன்மனோடும், கூர் அயிலை அத்திக்கு வைத்தான்-கூரிய வேற் படையைக்கடலிடத்தும் செலுத்தியவராகிய முருகனது, அகம்-இல்லமாகும்.

வி.கு

கம்பீரம் -வீறுமாம், அது தமக்கு இணையில்லாச்சிறப்பு, கோடிகம்-ஆடை.

(33)

*காவார் திருத்தலத்துங் காளையர்சே ரம்பலத்துந்*
*தேவா ரணமோதுஞ் செந்தூரே-கோவாகும்*
*வானத்துக் கையன் மலர்மான் மருகனெழில்*
*வானத்துக் கையன் மனை.*

ப-ரை

கா ஆர் திரு தலத்தும்-சோலைகள் நிறைந்த அழகிய கோயில்களிலும், தே ஆரணம் ஓதும்-கடவுள்க்குரிய வேதங்கள் ஓதப்பெறும், செந்தூரே-, காளையர் சேர் அம்பலத்தும்-இளைஞர் கூடும் ஊர்ப்பொதுவிலும், தே வாரணம் மோதும்-விலைக்குக் கொண்ட கோழிச்சேவல்கள் ஒன்றை யொன்று தாக்கும், செந்தூரே-, கோ ஆகும்-இறைவனாகிய, வால் நத்து கையன்-வெண்சங்கேந்திய திருக்கரத்தினராகிய திருமால், மலர் மான் மருகன்-செந்தாமரை மலரில் எழுந்தருளும் மான் ஒப்பாளாகிய திருமகள் என்னும் இருவர்க்கும் மருமகனும், எழில் வானத்துக்கு ஐயன்-அழகிய தேவலோகத்துக்கும் பெருந்தேவனுமாகிய குகனது, மனை-இல்லமாகும்.

வி.கு

வாரணம்-யானையுமாம், நந்து-நந்து என விகாரம் பெற்றது. நத்து-பாஞ்சசன்னியம்,

(34)

*நீர்த்தண் கரைப்புறத்தும் நீடு புளினத்துஞ்*
*சேர்மணள்ளிக் கால்வரையுஞ் செந்தூரே-ஊர்ப்புறஞ்சேர்*
*நாவற் கிளையான் நறுமோ தகஞ்சுவைக்கும்*
*நாவற் கிளையான் நகர்*

ப-ரை

நீ தண் கரை புறத்தும்-சமுத்திரநீரோடு கூடிய குளிர்ந்தகடற்கரைப் பக்கங்களிலும், சேர் மண்-அலைகள் சேர்க்கும் மணலில், நள்ளி கால் வரையும்-நண்டுக்கால்கள் படம்வரையும், செந்தூரே-, நீடு புளினத்தும்-நீண்ட மணற்குன்றுகளிலும், கால்-காற்றானது, சேர் மண் அள்ளி வரையும்-முன்பு சேர்த்த மணலை அள்ளி வரிகளை எழுதும், செந்தூரே-, ஊர் புறம் சேர் நாவல் கிளையான்-சிற்றூர்ப்புறத்தைச் சேர்ந்த நாவல் மரக்கிளையில் நின்றவரும், நறு மோதகம் சுவைக்கும் நாவற்கு இளையான்-நல்ல மோதகத்தைச் சுவைத்துண்ணும் நாவினராகிய விநாயகப் பெருமானுக்குத் தம்பியும் ஆகிய குமரனது, நகர்-கோயிலாகும்.

வி.கு

நாவற்கிளையான்-ஔவையுடன் நிகழ்த்திய திருவிளையாடல் குறித்தது. (35)

### மும்மொழிச்சிலேடை

*வீங்குதனத் தார்விழியும் வீழ்முசுவும் மாவடியுந்*
*தேங்கடம்பைச் சாடிமகிழ் செந்தூரே- ஓங்குசெச்சைப்*
*பூங்கணிய னாதன் புனத்தே முளைத்தபுதுப்*
*பூங்கணிய னாதன் புகல்.*

ப-ரை

வீங்கு தனத்தார் விழியும்பூரித்த தனங்களையுடைய மகளிரது கண்களும், தேங்கு அடு அம்பை சாடி மகிழ்-நிறைந்த கொல்லுதலையுடைய அம்புகளைத்தாக்கி மகிழ்கின்ற, செந்தூரே-, வீழ் முசுவும்-தாவிவிழுகின்ற குரங்குகளும், தேம் கடம்பை சாடி மகிழ்-தேன் பொருந்திய கடம்பமரங்களைத்தாக்கி மகிழ்கின்ற, செந்தூரே-, மான் அடியும்-அங்குள்ள மான்களின் பாதங்களும், தேங்கு அடம்பை சாடி மகிழ்-நிறைந்த அடப்பங்கொடிகளை அழகால் தாக்கி மகிழும், செந்தூரே-, ஓங்கு செச்சை பூ கணியன்-உயர்ந்த வெட்சி மலர் மாலையரும், ஆதன்-உயிர்களிடத்தன்புள்ளவரும், புனத்தே முளைத்த புது பூ கணியன்-தினைக்கொல்லையில் தோன்றிய புதிய பூக்களையுமுடையவேங்கை மரமானவரும், நாதன்-எங்கள் தலைவருமாகிய குகன், புகல்-புகுந்திருக்கும் தலமாகும்.

வி.கு

மான் அடி அடம்பைச்சாடுதல், அடம்பிலைகள் மான் அடிக்கு அழகால் தோற்றுப்போதல், கண்ணி-கணி எனநின்றது. ஆதம்-அன்பு, கணி-வேங்கைமரம்.

(36)

*ஊக்கமிகுஞ் சாத்தினரா லோங்கு கடற்றிரையால்*
*தேக்கெறிந்து சீகரஞ்சேர் செந்தூரே-ஏக்கந்*
*தணிகைக் குமரன் றனியயிலைக் கொண்டான்*
*தணிகைக் குமரன் றலம்.*

ப-ரை

ஊக்கம் மிகும் சாத்தினரால்-தளராமுயற்சியால் உயர்கின்ற வணிகரால், தேக்கெறிந்து சீகரம் சேர்-நிறைந்து பரந்து செல்வச்செழிப்புக்கூடுகின்ற, செந்தூரே-,

ஓங்கு கடல் திரையால்-உயர்ந்து எழும் கடலலைகளால், சீகரம் தேக்கு எறிந்து சேர்-நீர்த்துளிகள் தேக்கமரங்களையும் முறித்துக்கடலோடும் சேர்கின்ற, செந்தூரே-, ஏக்கம் தணிகைக்கும்-ஆன்மாக்களின் அச்சத்தைத்தணிக்கும் திருக்கரத்துக்கும், அரன் தனிஅயிலை கொண்டான்-சிவனது ஒப்பற்ற வேற்படையைத் தாங்கிக் கொண்டவரும், தணிகை குமரன்-திருத்தணியில் எழுந்தருளிய குமரனுமாகியமுருகனது, தலம்-திருக்கோயிலாகும்.

வி.கு

ஏக்கந் தணிதல்-ஆன்மாக்களுக்குவரும் அச்சமன்றி, தேவர்களுக்குச் சூரபன்மனால் வந்த அச்சத்தையும் தணித்தமையாம். ஸ்ரீகரம்-சீகரமாயிற்று.

(37)

*பெய்யும் மழைவளத்தாற் பீடுநடை மீளியராற்*
*செய்யார் பயந்திரைக்குஞ் செந்தூரே- துய்யவருள்*
*தானவரைக் கோட்டத்தன் சாசுவதன் வெங்களத்தே*
*தானவரைக் கோட்டத்தன் சார்பு.*

ப-ரை

பெய்யும் மழை வளத்தால்-பொழியும் மழைச்செழிப்பால், செய் ஆர் பயம் திரைக்கும் வயல்களில் நிறைந்த நீரானது அலையெறிகின்ற, செந்தூரே-, பீடு நடை மீளியரால்-பெருமித நடையினையுடைய வீரர்களால், செய்யார் பயந்து இரைக்கும்-பகைவர்கள் அஞ்சி மூச்செறியும், செந்தூரே-, துய்ய அருள் தான வரை கோட்டத்தன்-பரிசுத்தம் நிறைந்த திருவருள் சார்ந்த தலங்களாகிய மலைக்கோயில்களையுடையவரும், சாசுவதன்

நித்தியமாயிருப்பவரும், வெம் களத்து தானவரை கோட்டு அத்தன்-கொடிய போர்க்களத்தில் அசுரரை வளைத்துக்கொண்டவருமாகிய சண்முகக்கடவுள், சார்பு- சேர்ந்திருக்கும் தலமாகும்.

வி.கு

பீடுநடை-வலியநடையுமாம், துய்யவர் உள் தானம் எனப்பகுத்து, துயோர் உள்ள இடம் எனவும் பொருள் கொள்க, வரைக்கோட்டம்- குறிஞ்சிக் கோயில்கள், சாசுவதம்-அசையாநிலை, மோட்சம் எனவும் நின்றது. (38)

*பம்புமுயிர் வேயிசையாற் பார்புகழுங் கன்னாராற்*
*செம்பாலைக் கேயுருகுஞ் செந்தூரே-வெம்பும்*
*களிறு கடாவினார் காணவள்ளிக் குன்றிற்*
*களிறு கடாவினார் காப்பு.*

ப-ரை

பம்பும் உயிர்-பரக்கும் சீவராசிகள், வேய் இசையால்-இடையரூதும் புல்லாங்குழலிசையால், செம்பாலைக்கு உருகும்- செம்பாலைப் பண்ணுக்கு நெகிழ்ந்து நிற்கும், செந்தூரே-, பார் புகழும் கன்னாரால் உலகம்புகழும் கன்னாரால், செம்பு ஆலைக்கு உருகும்-செப்புலோகங்கள் ஆலைகளில் உருகுகின்ற, செந்தூரே-, வெம்பும் களிறுகள் தாவினார் காண-சினக்கின்ற திக்கியானைகளைச் செலுத்துபவராகிய திக்குப்பாலகர் கண்டு நிற்கவே, வள்ளி குன்றில்-வள்ளிமலையில், களிறு கடவினார்-வேழம் வினாவியவரான செவ்வேளது, காப்பு-காவலமைந்த தலமாம்.

வி.கு

உயிர்-இருதிணை உயிர்கள், செம்பாலை-ஒருவகைப்பண், அது குரல் குரலாகவாசித்தல், ஆலை-தொழிற்சாலை, வேழம்வினாதல்-அகப்பொருள் துறைகளில் ஒன்று. (39)

*நித்தன் றிருநடமும் நீடு கழைக்கூத்துஞ்*
*சித்தி யரங்காடுஞ் செந்தூரே -உத்தண்ட*
*வீரவா குப்புறத்தார் வேழத் திதயத்தார்*
*வீரவா குப்புறத்தார் வீடு.*

ப-ரை

நித்தன் திருநடமும்-என்றுமுள்ள இறைவனது அழகிய கூத்துகளும், சித்தியர் அங்கு ஆடும்-தேவமகளிரால் அவ்விடத்தே ஆடப்பெறும், செந்தூரே-, நீடு கழை கூத்தும்-நீண்ட கம்பங்கூத்துகளும், சித்தி அரங்கு ஆடும்-கைகூட வல்ல பொதுமன்றங்களில் ஆடப்படும், செந்தூரே-, உத்தண்ட வீர ஆகு புறத்து ஆர்-இறுமாப்பும்வீரமும் உடைய பெருச்சாளியின் முதுகில் எழுந்தருளும், வேழத்து இதயத்தார்-ஆனைமுகரது நெஞ்சத்திருப்பவரும், வீரவாகு புறத்தார்-வீரவாகுதேவருக்குப் பக்கலாகநிற்பவருமாகிய குமரவேளது, வீடு-இல்லமாகும்.

வி.கு

நித்தன் திருநடம்-கொடுகொட்டி பாண்டரங்கம், சாக்கைக்கூத்து ஆதியன, கழைக்கூத்து-மூங்கில்மேல் ஆடும்கூத்துகள், உத்தண்டம்-உக்கிர கோபமுமாம், ஆகு-கயாசுரனாகிய பெருச்சாளி, வீரவாகுதேவர்-நவவீரரில் முதல்வர். சூரபன்மனுடன் நிகழ்த்தியபோரில் படைகளுக்குத்தலைமை தாங்கியவர். (40)

*தாம்பார் குழக்கன்றாற் றண்டமிழ்தேர் பாவலரால்*
*தேம்பா வணிகூடுஞ் செந்தூரே- தீம்புத்*
*திரிபு வனத்தார் சினத்தழலைத் தேய்த்த*
*திரிபு வனத்தார் செருக்கு.*

ப-ரை

தாம்பு ஆர் குழ கன்றால்-கயிறோடு பொருந்திய இளங்கன்றுகளால், தேம்பு ஆ ஆணி கூடும்-வருந்தும் பசுக்கள் நிரையிற்கூடிவருகின்ற, செந்தூரே-, தண் தமிழ் தேர் பாவலரால்-குளிர்ந்த தமிழ்மொழியை ஆராய்கின்ற கவிஞர்களால், தேம் பா அணி கூடும்-இனிய செய்யுள் அலங்காரங்கள் உயர்ந்து வருகின்ற, செந்தூரே-, தீம்பு திரிபு வனத்து ஆர் - கேடைந்து விகாரமுற்ற பாலைநிலத்தே பொருந்திய, சின தழலை தேய்த்த-கோபிக்கும் நெருப்பை அழித்த, திரிபுவனத்தார்-மூவுலகிலுமுள்ள முருகனது, செருக்கு-மிகுந்தகளிப்புக்குரிய இடமாம்.

வி.கு

தாம்பு-கன்றையும் தறியையும் இணைக்கும் கயிறு, ஆ அணிகூடுதல் கன்றுகளை நினைந்து பசுக்கள் அந்திவேளையிற்கூடுதல், தீம்பு-கேடு, அழல் தேய்த்தமை போர்க்காய்வந்த வழி நடையிலாம். திரிபு வனம்-நால்வகை நிலங்கள் மழையின்மையால் பாலையாதல். (41)

*பாவமுறா நற்பலியைப் பண்ணூசற் பார்க்கவியைத்*
*தேவராட் டிக்களிக்குஞ் செந்தூரே- சேவன்*
*குளத்துதிக்கைப் பாலன் குடிலைப் பொருளன்*
*குளத்துதிக்கைப் பாலன் குடில்*

ப-ரை

பாவம் உறா நல் பலியை-தீவினையில்லாத நல்ல பலிச்சோற்றை, தேவராட்டிக்கு அளிக்கும்-படிமத்தாளுக்கு வழங்கும், செந்தூரே-, பண் ஊசல்-அலங்கரிக்கப்பெற்ற ஊஞ்சலில், தேவர் பார்க்கவியை ஆட்டி களிக்கும்-தேவர்கள் பார்ப்பதியை ஆட்டி மகிழும், செந்தூரே-, சேவன் - இடபவாகனராகிய சிவபெருமானது, குளத்து உதிக்கை பாலன்-நெற்றியில் தோன்றுதலாய இயல்பை உடையவரும், குடிலை பொருளன்-பிரணவப் பொருளாயிருப்பவரும், குளம் துதிக்கை பாலன்-சரவணதடாகத்தின் போற்றுதலுக்குமுரிய குழந்தையுமாகிய சரவணபவனது, குடில்-இல்லமாகும்.

வி.கு

தேவராட்டி-குறிசொல்லும்படிமத்தாளென்னும் சன்னதகாரி, சே-இடபம், (42)

*அம்பண்டி ஒட்டுநரு மாடற்போர்க் காளையருந்*
*தெம்மாங்குப் பாடிவருஞ் செந்தூரே- மம்மர்*
*மருத்துப் புயத்தார் மலைந்தவயி றொட்டார்*
*மருத்துப் புயத்தார் மனை.*

ப-ரை

அம் பண்டி ஒட்டுநரும்-அழகிய வண்டிகளைச் செலுத்தும் சாரதியரும், தெம்மாங்கு பாடிவரும்-தெம்மாங்கு என்னும் நாட்டார் பாடலைப்பாடி வருகின்ற, செந்தூரே-, ஆடல்போர் காளையரும்-வெற்றிப்போர்வல்ல காளையொக்கும் வீரரும், தெம் ஆங்கு, பாடி வரும்-போரமைந்த அவ்விடங்களில் உள்ள பாசறைகளுக்கு வந்து சேரும், செந்தூரே-, மம்மர் மரு துப்பு உய-மயக்கம் தரும் மலையின் வலிமை நீங்கும் வண்ணம்,

தார் மலைந்த அயில் தொட்டார்-மாலை சூடிய வேற்படையைப் பிரயோகித்தவரும், மருத்து புயத்தார்-வாயுதேவனது தோளில் அமர்ந்திருந்தவருமாகிய சுப்பிரமணியரது, மனை-இல்லமாகும்.

வி.கு

உடய-நீங்க, 'உயற்பாலதோரும்பழி' என்பது வள்ளுவர் பிரயோகம், மம்மர் மரு-கிரவுஞ்சமலை, ஆறு அக்கினிப்பொறிகளை வாயுதேவனும் தோளிற் சுமந்தமையால் குமரனும் மருத்துப்புயத்தார் ஆயினன்.
(43)

*கார்நண் டளைபுகலாற் காதணிகொள் மன்மதராற்*
*சேர்குண் டலமலங்குஞ் செந்தூரே- சீர்க்காஞ்சி*
*ஏகாம் பரத்தா ரெழிற்றா யிதயத்தார்*
*ஏகாம் பரத்தா ரிருப்பு*

ப-ரை

கார் நண்டு அளை புகலால்-கரிய நண்டுகள் வளைக்குட்புகுவதால், சேர் குண்டு அலம் மலங்கும்-வயல்களைச்சேர்ந்த குழிகளில் உள்ள நீர் கலங்கும், செந்தூரே-, காதணி கொள் மன்மதரால்-காதுகளில் ஆபரணங்களைக் கொண்டுள்ள மன்மதன்போல்வாராகிய ஆடவரால், சேர் குண்டலம் அலங்கும்-திரண்ட குண்டலங்கள் அசைகின்ற, செந்தூரே-, சீர் காஞ்சி ஏகாம்பரத்தார் எழில் தாய் இதயத்தார்-சிறந்த காஞ்சிபுரத்துள்ள ஏகாம்பரநாதரதும் அழகிய தாயாகிய காமாட்சியினதும் நெஞ்சத்திருப்பவரும், ஏ காம் பரத்தார்-அம்புகளைக் காவும் மேலானவருவமாகிய குமரனது, இருப்பு-வாசஸ்தலமாகும்.

வி.கு

சேர் குண்டலம்-திரண்டகுண்டலம், அலங்குதல்-விளங்குதல் எனவும் நின்றது. ஏகாம்பரத்து ஆர் எழில் தாய் எனவும் கூட்டுக. காம் ஏ பரத்தார் எனக்கூட்டிக்காவும் அம்புகளாகிய சுமையை உடையவர் எனவும் பொருள் கொள்க. காம்-காவும், வாவும் தாவும் என்பன வாம் தாம் என வருதல் போலக்காவும் நின்றது. (44)

*கந்தமலர் சோலையினுங் காவிமலர் வாவியினுஞ்*
*செந்தா மரைகூடுஞ் செந்தூரே -வெந்தழனேர்*
*வேலை யுறைகழித்தான் மீகஞ்சா ரான்வெருவ*
*வேலை யுறைகழித்தான் வீடு*

ப-ரை

கந்தம் மலர் சோலையிலும்- நறுமணம் விரியும் பூஞ்சோலைகளிலும், செந்து ஆ மரை கூடும்-சீவராசிகளாகிய பசுக்கள் மான்கள் என்பன வந்து சேரும், செந்தூரே-, காவி மலர். வாவியினும்-நீலோற்பலங்கள் பூக்கும் தடாகங்களிலும், செந்தாமரை கூடும்-செந்தாமரைகளும் இணைந்திருக்கும், செந்தூரே-வெம்தழல் நேர் வேலை உறை கழித்து-வெவ்விய தீ யொக்கும் வேற்படையை உறையினின்றும் நீக்கி, ஆன்மீகம் சாரான் வெருவ-ஆத்மீக வழியோடு இணையாதவனாகிய சூரபன்மன் அஞ்சும்படி, வேலை உறை கழித்தான்-சமுத்திரநீர்த்துளிகளையும் இன்மை செய்தவராகிய முருகனது, வீடு இல்லமாம்.

வி.கு

மரை-மானன்றி மரைகளுமாம், செந்தாமரை எனவே வாவிகளில் வெண்டாமரைகளும் இணைத்தவாறாம். வேலை உறைகழித்தல்-வாரிசுவறிட அழித்தல்

(45)

*பொய்யில் புலவோராற் போற்றுழவர் கார்மழையாற்*
*செய்யுட் பதமாயுஞ் செந்தூரே- தெய்வதஞ்சேர்*
*கானத்தி யாகமுற்றான் காணமலை யாட்டயர்ந்தான்*
*கானத்தி யாகமுற்றான் காப்பு*

ப-ரை

பொய் இல் புலவோரால்-மெய்யறிஞர்களால், செய்யுள் பதம் ஆயும்-கவிதைகளில்உள்ள சொற்கள் ஆராயப்படும், செந்தூரே-, கார்மழையால்-கார் காலப் பெருமழைப் பொழிவால், செய் உள்-வயல்களில், போற்று உழவர் பதம் மாயும்-துதிக்கப்பெறும் உழவரது பாதங்கள் மறைகின்ற, செந்தூரே-, தெய்வதம் சேர் கான் அத்தி யாகம் உற்றான் காண-தெய்வத்தன்மை சார்ந்த கற்பகச்சோலை ஐராவதயானை வேள்வி என்பவற்றோடு இணைந்தவனாகிய இந்திரன் பார்த்துநிற்க, மலை ஆட்டு அயர்ந்தான்-மேருமலையிற் பாலலீலைகளைச் செய்தவரும், கானத்தி ஆகம் உற்றான்-குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியாரது மார்போடிணைந்த வருமாகிய விசாகனது, காப்பு-காவலுக்குரியதலமாம்.

வி.கு

போற்றுழவர்-ஏனைய மூவருணத்தாராலும் பிறராலும் துதிக்கப் பெறும் உழவர். உலகம் இயங்க உண்டி கொடுப்பவர் உழவரே. அதனால் அவர்கள் போற்றுழவராயினர். அத்தி-ஈண்டு வெள்ளானை, யாகம்-அசுவமேதயாகம், அது குதிரைகளை அழித்துச் செய்யப்படுவது என்பது பொருள், மேதம் -கொலை, அயர்தல்-செய்தல்

(46)

*வன்னக் குருகினமும் வாரணமாம் பொற்பிளையுந்*
*தென்னோலைக் கண்ணாடுஞ் செந்தூரே-என்றன்*
*மடங்கலைத்தா னட்டான் மதிலா சுரத்து*
*மடங்கலைத்தா னட்டான் மனை.*

ப-ரை

வன்ன குருகு இனமும்-அழகிய பறவைக் கூட்டங்களும், தென் ஓலைக்கண் ஆடும்-தென்னோலைக்கண் இருந்து ஊஞ்சலாடும், செந்தூரே-, வாரணம் ஆம் பொன் பிளையும்-யானையாகிய அழகுப்பிள்ளையாரும், தென் நோலைக்கண் நாடும்-அழகிய எள்ளுருண்டையிடத்தே நாட்டமுறுகின்ற செந்தூரே-, என்தன் மடம் கலைத்தான்-அடியேனது அறியாமையைச்சிதைத்து, நட்டான்-உறவு கொண்டிருப்பவரும், மதில் ஆசுரத்து மடங்கலை தான் அட்டான்-அரண்சூழ்ந்த ஆசுரத்திருந்தசிங்க முகாசுரனையே அழித்தவருமாகிய சேயோனது, மனை -இல்லமாகும்.

வி.கு

வன்னம்-நிறமும்ஆம், குருகு-நாரை அன்றில் என்னும் வர்க்கமுமாம். நோலை கள் நாடும் எனப்பகுத்து எள்ளுருண்டையோடு தேனையும் விரும்பும் எனவும் பொருள் காண்க, ஆசுரம்-சிங்கமுகாசுரனது இராஜதானி, கலைத்தான்-முற்றெச்சம். (47)

*கூவலெனக் காணிலத்துங் கூத்தன் றளியிடத்துந்*
*தேவகுண்டம் பாங்கலருஞ் செந்தூரே-காவலுறும்*
*அத்திக்க ரும்ப ரநவரத மும்போற்றும்*
*அத்திக்க ரும்ப ரகம்,*

ப-ரை

காண் நிலத்தும்-காணுமிடந்தோறும், கூவல் என-கிணறுகள் என்னுமாறு, தேவ குண்டு அம்பு ஆங்கு அலரும்-தானாகத்தோன்றும் நீர் ஊற்றுகள் அங்கே மலர்கின்ற, செந்தூரே-, கூத்தன் தளி இடத்தும்-நடராஜர் எழுந்தருளும் சிவாலயங்களிலும், தேவகுண்டம் பாங்கு அலரும்-ஓமகுண்டங்கள் நலத்தோடும் மலர்கின்ற, செந்தூரே-, காவல் உறும் அ திக்கர் உம்பர்-காவலாக நிற்கும் அந்தத்திக்குப்பாலகர்களும் தேவர்களும், அநவரதமும் போற்றும்-எப்பொழுதும் துதிக்கின்ற, அத்தி கரும்பர் அகம்-தேவயானைக்குக் கரும்பாய் இருப்பவராகிய குமரனது, அகம்-இல்லமாம்.

வி.கு

காண்நிலம்-அழகு நிலங்களுமாம், காண்-அழகு, பாங்கு-நன்மை, ஓமகுண்டம் மக்களுக்கு நன்மை பயத்தலின் பாங்கு நன்மையாயிற்று, அத்தி ஈண்டு தேவயானை (48)

*வார்குழலார் கோதையினல் வட்டமென நீடிரையிற்*
*றேர்வண் டிருக்கையுறுஞ் செந்தூரே-சூர்பயப்பத்*
*தக்கன் றலையெறிந்தான் றம்பி சமர்க்களத்தே*
*தக்கன் றலையெறிந்தான் சார்பு.*

ப-ரை

வார்குழலார் கோதையில் -நீண்ட கூந்தலையுடைய பெண்களது மாலைகளிலும், தேர் வண்டு இருக்கை உறும் -தேனை ஆராயும் வண்டுகள் அமர்கின்ற செந்தூரே-, நீள் திரையில் -நீண்டுவரும் கடலலைகளிலும்,

நல் வட்டம் என- நல்ல ஆலவட்டங்கள் என்னுமாறு, தேர் வள் திருக்கை உறும்-இரை தேர்கின்ற–வளவிய திருக்கை மீன்கள் இணையும், செந்தூரே-, சூர் பயப்ப- அச்சந்தோன்றுமாறு, தக்கன் தலை எறிந்தான் தம்பி- தக்கப்பிரஜாபதியின் தலையை வெட்டியவரான வீரபத்திரருக்கு இளையவரும், சமர் களத்தே தக்கு- போர்க்களத்தே தரித்துநின்று, அன்று அலை எறிந்தான்- அந்நாளில் கடலலையை வறிதாக்கியவருமான சேந்தனது, சார்பு-இடமாகும்.

வி.கு

வட்டம்-குமரன் உலாவரும்போது தோன்றும் ஆலவட்டங்கள், திருக்கைமீனின் வாலும் உடல்வட்டமும் ஆல வட்டத்தை நினைவு செய்தன. சார்பு-பற்று எனவும் பொருள்தந்தது. அலை-ஆகுபெயர். வளம்-செழிப்பு அது திருக்கைகளின் உடற்செழிப்பு.

(49)

*பம்புதருச் சூழ்தடமும் பத்திமிகு யோகியருஞ்*
*செம்மனத்துக் காட்சியுறுஞ் செந்தூரே- வெம்பும்*
*அருண கிரிக்களிய னம்மான் றிருடன்*
*அருண கிரிக்களிய னாட்டு.*

ப-ரை

பம்பு தரு சூழ் தடமும்-பரந்த மரங்கள் சூழ்ந்திருக்கும் தடாகங்களும், செம்மல் நத்துக்கு ஆட்சி உறும்-பழம்பூக்கள் சங்குகள் என்னும் இரண்டினதும் ஆளுகைக்கு உட்பட்டிருக்கும், செந்தூரே-, பத்தி மிகு யோகியரும்-பக்தியால் மேம்பட்ட நிட்டைகூடுநரும், செம் மனத்து காட்சி உறும்- செப்பமான நெஞ்சத்தறிவோடு இணைந்திருக்கும்,

செந்தூரே-, வெம்பும்-யாவராலும் விரும்பப்படும், அருள் ந கிரி களியன்-திருவருள் சார்ந்த சிறந்த குன்றுகள் தோறும் களிப்புற்று நிற்பவரும், அம்மான் திருடன்-அழகிய வள்ளி நாயகியராகிய மானைக்களவாடியவரும், அருணகிரிக்கு அளியன்-அருணகிரிநாதரிடத்தே அன்புடையவருமாகிய முருகனது, ஆட்டு-லீலைகளுக்குரிய இடமாம்.

வி.கு

செம்மல்-பழம்பூக்கள், அவைவீழ்ந்து நீரைக் கவிந்திருத்தலின் தடாகம் அவற்றின் ஆட்சிக்குட்பட்டவாறாம். அருள் ந கிரி என்பதில் ந.சிறப்பு என நின்றது. நக்கீரன் நப்பின்னைபோல் நகரத்தைக்கொள்க நக்கிரி-நகிரி என விகாரம் பெற்றது. அம்மான் திருடன்-மாமனாகிய திருமாலுக்கும் திருடனாகியவன் எனினும் ஒக்கும். அருணகிரி-திருவருணையாகவும் நின்றது. (50)

***மென்விரல்கள் மங்கையர்க்கும் வீங்கா வணத்தார்க்குந்***
***தென்மா டகத்தேயுஞ் செந்தூரே- மன்னுமுயிர்க்***
***காப்புக் கிருந்தான் கணமேய்த்தான் தோகையொடுங்***
***காப்புக் கிருந்தான் களம்.***

ப-ரை

மங்கையர்க்கும்-மங்கைப்பருவ மகளிர்க்கும், மென் விரல்கள் தென்மாடகத்து ஏயும்-மெல்லிய கைவிரல்கள் அழகிய யாழின் முறுக்காணியுடனும் இணையும், செந்தூரே-, வீங்கு ஆவணத்தார்க்கும்-மனம் பூரிக்கும் கடை வீதி வணிகர்க்கும், தென் மாடு அகத்து ஏயும்-அழகிய செல்வங்கள் இல்லந்தோறும்

பொருந்தியிருக்கும், செந்தூரே-, மன்னும் உயிர் காப்புக்கு இருந்து-நிலைக்கின்ற ஆன்மாக்களது காவலுக்கமர்ந்தவாறே, ஆன் கணம் மேய்த்தான் தோகையொடும்-பசுக்கூட்டங்களை மேய்த்தவராகிய கண்ணபிரானுக்கு மகளாகிய மயிலொக்கும் வள்ளிநாயகியாரோடும், கா புக்கு இருந்தான்-இளமரச் சோலையுட்போய்த்தங்கியிருந்தவராகிய சண்முகனது, களம்-வாசஸ்தலமாகும்.

வி.கு

மாடகம்-யாழின் சுருதி சேர்க்கும் முறுக்காணி, விரல்கள் முறுக்காணியுடன் இணையும் எனவே மங்கையர் எவரும் சுருதி நீக்கிப்பாடார் என்பது நியதியாம். அதனால் அவர்தம் இசைப்புலமை நுண்ணியது என்பது பெற்றாம் கா-ஈண்டு வள்ளி நாயகி முருகனுடன்உடன் போக்குச் செய்து தங்கிய சோலை. கா எனவே அதில் தோகையும் பொருந்தியதெனக.

(51)

*இக்கனையார் பூங்கொத்து மேழ்மையொடு நற்றொழும்புஞ்*
*சிக்கத் திருந்தலர்செய் செந்தூரே-ஒக்கவே*
*நாரதனைப் போக்கினார் நாடரியர் கற்புனத்தே*
*நாரதனைப் போக்கினார் நட்பு.*

ப-ரை

இக்கு அனையார் பூ கொத்தும்-கரும்பு போல்வாராகிய பெண்கள் பறித்த மலர்த்தொகுதிகளும், சிக்கத்து இருந்து அலர்செய்-அவர்தம் குடுமிகளிலிருந்து மலர்கின்ற, செந்தூரே-, திருந்தலர் சிக்க-பகைவராயினோர் அகப்பட்டுக்கொள்ள, ஏழ்மையொடு நல் தொழும்பு செய்-ஏழ்மைத்தனத் தோடும் அதிகமான அடிமைவேலைகளைச் செய்கின்ற, செந்தூரே-,

ஒக்கவே- ஒருசேரவே, நார் அதனை போக்கு இனார் நாட அரியர்-முருகபக்தியை ஒழித்த ஆன்மீகப் பகைவர்களால் தேடுதற்கு அரியவரும், கல் புனத்து-மலைக்கொல்லையிடமாக, நாரதனை போக்கினார்-நாரதமுனிவரை விடுத்தவருமாகிய முருகனது, நட்பு-விருப்புக்குரிய தலமாம்.

வி.கு

இக்கனையார் மொழியாலன்றிப் பண்பாலும் பிறவற்றாலும் ஆடவர்க்கு இனிமை செய்பவர், ஏழ்மை-அவமானத்தோடும் செய்யும் வறுமைநிலை இன்னார்-இனார் எனக்குறைந்தது. நார்-இங்கு பக்திகுறித்தது. நாடரியர் விகாரம். (52)

மும்மொழிச்சிலேடை

*கொவ்வையிதழ் நாரியர்க்குங் குச்சிற்குங் காவுக்குஞ்*
*செவ்வரிகண் ணாடிவருஞ் செந்தூரே -கவ்வையிலாப்*
*பூதமஞ்சு மானான் புரஞ்சிதைத்தான் பேரண்டப்*
*பூதமஞ்சு மானான் புகல்*

ப-ரை

கொவ்வை இதழ் நாரியர்க்கும்-கோவைப்பழம் போலும் அதரங்களையுடைய மகளிர்க்கும், செவ்வரி கண் ஆடி வரும்-செந்நிறக்கோடுகள் கண்களில் அசைந்துவருகின்ற. செந்தூரே-, குச்சிற்கும்-சிறுவீடுகளுக்கும், செவ் அரி கண்ணாடி வரும்-செப்பமான படுக்கைக் கட்டில்கள் கண்ணாடிகள் என்பன தோன்றிநிற்கும், செந்தூரே-, காவுக்கும்-சோலைகளுக்கும், செவ் அரி கள் நாடி வரும்- செவ்விய வண்டுகள் தேனை விரும்பி வருகின்ற, செந்தூரே-,

கவ்வை இலா-பழிச்சொல் நீங்கிய, பூதம் அஞ்சும் மானான்-பூதவீரர்களும் அஞ்சுதற்குக் காரணமான பகைவனாகிய சூரபன்மது, புரம் சிதைத்தான்-மகேந்திரா புரியை அழித்தவரும், பேர் அண்ட-பெரிய அண்டங்கள் தோறுமுள்ள, அஞ்சு பூதம் ஆனான்-பஞ்சபூதங்களுமான வருமாகியகுகனது, புகல்-இருப்பிடமாகும்.

வி.கு

கண்ணாடி-நிலைக்கண்ணாடிகள், செவ்வரி-வெள்விழியில் தோன்றும் செந்நிறக்கோடுகள், அண்டம் உருண்டைவடிவான உலகங்கள் (53)

*வெள்வளையா ருங்கழலார் வேங்கை மறவருமே*
*தெள்ளேணங் கொட்டிவருஞ் செந்தூரே- முள்ளெயிற்று*
*நச்சரவக் கச்சரிப்பார் நம்புசிவன் சேய்முத்தி*
*நச்சரவக் கச்சரிப்பார் நட்பு.*

ப-ரை

வெள்வளையாரும்-வெள்ளிய வளையலணிந்த பெண்டிரும், தெள்ளேணம் கொட்டிவரும்-தெள்ளேணம் என்னும் ஆடலைச்செய்து ஒலி எழுப்பிவரும், செந்தூரே-, கழல் ஆர் வேங்கை மறவரும்-வீரக்கழலணிந்த புலியொக்கும் போர்வீரரும், தெள் ஏண் அங்கு ஒட்டிவரும்-தெளிந்தவலிமையோடும் அங்கே இணைந்து வருகின்ற, செந்தூரே-, முள் எயிற்று நச்சு அரவ கச்சர்-முள்போலும் பற்களில் நஞ்சினையுடைய பாம்பாகிய அரைக்கச்சையுடையவரும், இ பார் நம்பு சிவன் சேய்-இந்த உலகத்தரால் விரும்பப்படுபவருமாகிய சிவபெருமானுக்கு மைந்தரும், முத்தி நச்சர் அவ கச்சு அரிப்பார்-வீடுபேற்றில் விருப்புடையோரது வீணான பாசக்கட்டுகளை அழிப்பவருமாகிய சேந்தனது, நட்பு-விருப்புக்குரிய இடமாம்.

வி.கு

தெள்ளேணம்-கைகொட்டிப்பாடியாடும் மகளிர் விளையாட்டுகளில் ஒன்று. கொட்டுதல்-தாள அறுதியோடு கையடித்தல், ஏண்-வலிமை, அது வேங்கைக்கமைந்த வலிமை. நம்புதல்-அருள்புரிவார் என்னும் மாறாநினைப்பு. (54)

*ஊர்திரைசேர் நற்றாயு மூசலதை மின்னாருந்*
*தேர்வங்கத் தாலாட்டுஞ் செந்தூரே-தார்புனைந்த*
*பண்டத்தைக் காட்டினான் பால்மொழியாட் காமன்பைப்*
*பண்டத்தைக் காட்டினான் பற்று.*

ப-ரை

ஊர் திரை சேர் நல் தாயும்-தவழுகின்ற அலைகள் சேர்ந்த நல்ல ஆழித்தாயும், தேர் வங்க தாலாட்டும்-தேர்போலும் மரக்கலங்களுக்குரிய தாலாட்டைப்பாடும், செந்தூரே-, மின்னாரும்-மின்னொக்கும் மகளிரும், ஊசலதை-ஊஞ்சல்களை, தேர்வு அங்கத்தால் ஆட்டும்-தெரிந்து படைத்த கரங்களாகிய உறுப்பினால் ஆட்டும், செந்தூரே-, தார் புனைந்த-ஆரம்சூடிய, பண் தத்தை காட்டின். இசைமொழிபேசும் கிளிகள் நின்ற காட்டின்கண் நின்ற, ஆன் பால் மொழியாட்கு ஆம் அன்பை-பசும்பால் போலும் மொழியளாகிய வள்ளி நாயகியார்க்காகும் அன்பாகிய நீரை, பண்டு-முன்னாளில், அத்தைக்கு ஆட்டினான்-மாமியருக்குஞ் சொரிந்தவரான முருகவேளது, பற்று-விருப்புக்குரிய இடமாம்

வி.கு

ஊர்தல்-தவழ்தல். அது மோதுதலாம், தேர் வங்கம்-தெரிந்து செய்த மரக்கலங்கள் எனினும் ஒக்கும், மின்னார்-இடையால் மின்னொப்பவர். தேர்வு அங்கம்-சாமுத்திரிகாலட்சணத்தேர்வு அங்கம், தார்-கிளிக்கழுத்தில் உள்ள செந்நிறக்கோடு. செந்தார்ப்பசுக்கிளியே என்பது மணிவார்த்தை. அத்தை வள்ளிநாயகியாரை ஈன்ற மானும் வளர்ப்புத்தாயாகிய கொற்றக் கொடிச்சியுமாம். ஆட்டுதல்-நீராட்டுதலன்றிப் பாராட்டுதலும்மாம். (55)

*கான்மலர்த்துந் தென்றியுந்தண் கானற் கருளனுமே*
*தேன்பொதிகை தைவருஞ்சீர்ச் செந்தூரே-தோன்ற*
*முளரிக்க ணாடினான் மூள்சினத்த னேங்க*
*முளரிக்க ணாடினான் மோப்பு.*

ப-ரை

கான் மலர்த்தும் தென்றியும்-வாசனையை விரிக்கும் தென்றற் காற்றும், தேன் பொதிகை தைவரும் சீர்-தேன்பாயும் பொதிகைமலையையுந் தடவி வருகின்ற சிறப்புடைய, செந்தூரே-, தண் கானல் கருளனும்-குளிர்ந்த கடற்கரைச் சோலையிலுள்ள கருடனும், தேன் பொதி கைதை வரும் சீர்-தேன் நிறைந்த தாழையின் கண்ணும் வந்தமரும் சிறப்புடைய, செந்தூரே-, தோன்ற-மூர்த்தங் கொள்ள, முளரி கண் நாடினான்-அக்கினிக் கண்ணை விரும்பியவரும், மூள் சினத்தன் ஏங்க-தீப்போல் மூண்டெழும் கோபத்தினான சூரபன்மன் அஞ்சுமாறு, முளரி கண் ஆடினான்-தாமரை மலர்களிடத்தமர்ந்து ஆடியவருமாகிய குமரப்பெருமானது, மோப்பு-காதலமைந்த தலமாம்.

வி.கு

பொதிகை அகத்தியர் தாபனம், தமிழுக்கு மூலம் அகத்தியர் என்பதால் அத்தமிழும் செந்தூர்க்குத் தென்றலாற் கொண்டுவரப்படுகின்றது என்பது பெற்றாம், சினத்தனேங்கக் குழந்தை முருகனின் தாமரையாட்டம் ஏதுவாய் நின்றவாறாம், தாமரை-பொருளாகுபெயர்.

(56)

*கந்துகக்கைப் பாவையர்க்குங் காண்கலத்தைச் சாத்தினர்க்குஞ்*
*சிந்துரவேர் வங்கலைக்குஞ் செந்தூரே-அந்தக்*
*கொடியனலன் பாற்றினான் கூவிரத்தேர் நின்ற*
*கொடியனலன் பாற்றினான் கூத்து.*

ப-ரை

கந்துக கை பாவையர்க்கும்-பந்தடிக்கக்கை கொண்ட பாவை போல்வாராகிய மகளிர்க்கும், சிந்துர வேர்வு அம் கலைக்கும்-சிந்தூர திலகங்கலந்த வியர்வையானது அவர்களது அழகை அழிக்கும், செந்தூரே-, சாத்தினர்க்கும்-வணிகர்களுக்கும், சிந்து உர வேர்வு-கடலின் வலிய சினமானது, காண் கலத்தை அங்கு அலைக்கும்-அழகிய மரக்கலங்களை அந்தக்கடலின் மேற்பரப்பில் அசைத்துவருத்தும், செந்தூரே-, அந்த கொடியன் நலன் பாற்றினான்-அக்கொடியவனான சூரபன்மனது நன்மைகள் யாவற்றையும் அழித்தவரும், கூவிரத்து ஏர்நின்ற - தேரின் கூவிரம் என்னும் பகுதியில் அழகோடு நின்ற, கொடி-கொடியாகிய, அனல் அன்பு ஆற்றினான்-அக்கினி தேவனது அன்பைச் சுமந்தவருமாகிய செவ்வேட் பெருமானது கூத்து-அருள் நடத்துக்குரிய தலமாம்.

வி.கு

அழகு கலைதலுக்கு வியர்வையும் வியர்வைக்குப் பந்தடித்தலும் ஏதுக்களாயின, காண்கலம்-கண்ணுக்குத் தோன்றும் கலங்களுமாம், பாவை-கொல்லியம் பாவையும் அழகுப்பாவையும் என இரண்டையுந் தழுவியது, கொல்லிப்பாவை கொல்லி மலையிலுள்ள நகைத்துக் கொல்லும் தெய்வம். அதுபோல் செந்தூர்ப்பாவையரும் தம் அழகால் ஆடவரை வருத்துவர் என்பது கருத்தாம். கூவிரத்தேர் கூவிரத்தோடு கூடியதேருமாம். அக்கினி தேவன் கொடியாய் நின்றது சூரபன்மனுடன் நிகழ்ந்த போரிலாகும். (57)

*மெச்சும்போர்க் காம்பொதுவில் வீழ்நிரைமீட் பார்புயத்திற்*
*செச்சைக் கணிகூடுஞ் செந்தூரே-கச்சியப்ப*
*வண்ணத் திருத்தினார் மன்காயங் குங்குமமாம்*
*வண்ணத் திருத்தினார் மன்று.*

ப-ரை

மெச்சும் போர்க்கு ஆம் பொதுவில்-வியந்து பேசும் கடாப்போர்க்காகிய பொதுமன்றிலும், செச்சைக்கு அணிகூடும்-ஆட்டுக்கடாக்க ளுக்குரிய அலங்காரங்கள் உயர்ந்துவரும், செந்தூரே-, வீழ் நிரை மீட்பார் புயத்தில்-யாவராலும் விரும்பப்படும் பசு நிரைகளை மீட்டுவரும் வீரகளது தோள்களிலும், செச்சை கணி கூடும்-வெட்சிமாலைகள் இணையும், செந்தூரே-, கச்சியப்ப வண்ண திருத்தினார்-கச்சியப்ப சிவாச்சாரியரது கந்தபுராணச் செய்யுள்களில் செப்பஞ்செய்தவரும், மன் காயம்-என்று முள்ள தமது திருமேனியையும், குங்குமம் ஆம் வண்ணத்து இருத்தினார் குங்குமமாகிய நிறத்தில் இருத்திக் கொண்டவருமாகிய முருகனது, மன்று-ஞானசபையாம்.

வி.கு

பொது-ஊரார் கூடும்பொதுவிடம், வீழ்நிரை-முன்பு வீழ்ந்த நிரையுமாம். கந்தபுராண ஆசிரியர் கச்சியப்பர், அவர் ஆழ்ந்தமுருகபத்தர், அவர்தாம் பாடிய பாடல்களைத் தொடக்க நாள் தொட்டு அந்திப்பூசை முடிந்ததும் மாவடிமுருகன் முன்னிலையில் வைத்துத் திருக்கதவஞ்சாத்திவர மறு நாட்காலையில் பாடல்களில் ஆங்காங்கே திருத்தம் செய்யப்பட்டிருப்பதைச் சிவாச்சாரியார் பார்த்து ஆனந்தப்பரவசமானார் என்பது செவிவழிச்செய்தி.

கச்சியப்பவண்ணத்துத் தம்மை இருத்தினார் என்பதும் அமையும், வண்ணம்-பாட்டு கண்ணி-கணியாயது.

(58)

*மின்னனையா ராடும் வியன்றடத்து மாலயத்துஞ்*
*சின்னமதி காலையெழுஞ் செந்தூரே-துன்மதியான்*
*கற்கண் டனையான் கருவழித்தான் மாதுமைக்கோர்*
*கற்கண் டனையான் களம்.*

ப-ரை

மின் அனையார் ஆடும் வியன் தடத்தும்-மின்னல் ஒப்பாராகிய பெண்கள் நீராடும் பெரிய தடாகங்களிலும், சின்ன மதி காலை எழும்-சிறிய பூரண சந்திரர்கள் காலையில் உதயமாகும், செந்தூரே-, ஆலயத்தும் - கோயில்களிலும், அதிகாலை சின்னம். எழும்-வைகறையில் பல்வகை வாத்தியங்கள் ஒலிக்கத்தொடங்கும், செந்தூரே-, துன் மதியான்-துர்ப்புத்தியனான கிரவுஞ்சனது, கல் கண்டு-மாயமாகிய அந்த மலையை நோக்கி, அனையான் கரு அழித்தான்-அவனது பிறப்பை நாசஞ்செய்தவரும், மாது உமைக்கு ஓர் கற்கண்டு அனையான் - பெண்ணாகிய உமைக்கு ஒப்பற்ற கற்கண்டு போல்வாருமாகிய இளமுருகனது, களம்-தலமாகும்.

வி.கு

தடாகங்கள் பெரிதாகவே நீராடும் மகளிர் தொகையும் பெரிய தாயிற்று. சின்ன மதி-மின்னனையார் முகங்களாம். காலையில் மதி உதய மாதல் இல்பொருள், அதிகாலை-உஷத்காலம், கரு-கிரவுஞ்சனது மாயத்தோற்றமும் உடம்புமாம். (59)

*அன்னநடை யார்கரத்து மாம்பற் பழனத்துந்*
*தென்சொற் கிளைபயிலுஞ் செந்தூரே-கொன்றையொடு*
*கோதண்டக் கையன் குழையக் குடிலைசொற்ற*
*கோதண்டக் கையன் குடில்*

ப-ரை

அன்ன நடையார் கரத்தும்-அன்னத்தின் நடையை உடையவராம் மகளிரது கைகளிலும், கிளை-கிளிகள், தென்சொல் பயிலும்-தமிழ்மொழியைக் கற்கின்ற, செந்தூரே-, ஆம்பல் பழனத்தும்-குவளைகள் பூக்கும் வயல்களிலும், தென் சொல் கு இளை பயிலும்-அழகிய நெற்பயிருக்குக்கட்டுவேலிகள் செய்யப்படும், செந்தூரே-, கொன்றையொடு-கொன்றைமலரோடு, கோது அண்டு அக்கு ஐயன் குழைய-குற்றம் இணைந்துள்ள எலும்புமாலையையும் தரிக்கும் தலைவராகிய சிவனது நெஞ்சம் நெகிழுமாறு, குடிலை சொற்ற கோ-பிரணவப் பொருளை உபதேசித்த இறைவரும், தண்ட கையன்-கோலேந்திய திருக்கரத்தினருமாகிய சேந்தனது, குடில்-இல்லமாகும்.

வி.கு

கிள்ளை-கிளை என நின்றது. கொன்றையும் எலும்பும் தரித்தல்-சிவன் யாவற்றிலும் நீக்கமறநிற்பவர் என்பதைக்காட்டுதலாம். தண்டக்கையன்-தண்டபாணி. அது பழனித்திருத்தலமூர்த்தம். கொன்றை பொருளாகுபெயர். (60)

*ஆர்க்குஞ் சுரும்பால் அணிதிகழு மாண்மைகளால்*
*சீர்த்தக்க ராகமலர் செந்தூரே-வேர்த்துவந்த*
*தானவனை நேர்ந்தான் சதாசிவனே யென்றிசைப்பத்*
*தானவனை நேர்ந்தான் றலம்.*

ப-ரை

ஆர்க்கும் சுரும்பால்-ஒலிக்கும் வண்டுகளால், சீர் தக்கராகம் மலர்-சிறந்த தக்கராகப்பண் விரிகின்ற செந்தூரே-, அணி திகழும் ஆண்மைகளால்-அழகு விளங்கும் ஆளுமைகளால், சீர் தக்கர் ஆகம் மலர்-சிறந்த சமர்த்தர்களது உடல்களும் அகன்றிருக்கும், செந்தூரே-, வேர்த்து வந்த-சினங்கொண்டு வந்த, தானவனை நேர்ந்தான்-அசுரனாகிய சூரபன்மனை எதிர்ந்தவரும், சதாசிவனே என்று இசைப்ப-சதாசிவ மூர்த்தமே என்று வேதங்கள் சொல்லும்படி, தான் அவனை நேர்ந்தான்-தானும் அந்தச்சிவபிரானை ஒத்திருப்பத் தோன்றியவருமாகிய குகனது, தலம்-கோயிலாகும்.

வி.கு

ஆண்மை-ஆண்மைச்செயல்கள் குறித்தது. சதா-எப்பொழுதும் எனவும் பொருள்தந்தது. (61)

*செந்தமிழ்தேர் பாவலருஞ் செல்வக் கலத்தினருஞ்*
*சிந்துக் கவிபடைக்குஞ் செந்தூரே-கந்திணையாப்*
*பூக்குஞ் சரத்துணையான் பூந்தினைமா வுக்கலந்தான்*
*பூக்குஞ் சரத்துணையான் பூப்பு*

ப-ரை

செந்தமிழ் தேர் பாவலரும்-செவ்விய தமிழ்மொழியை ஆராய்கின்ற கவிஞரும், சிந்துக்கவி படைக்கும்-சிந்துக்கவி என்னும் புது நடைப் பாடல்களையும் ஆக்கும், செந்தூரே-, செல்வ கலத்தினரும்-திரவியந்தேடும் மரக்கலத்தினரும், சிந்துக்கு அவி படைக்கும்-சமுத்திர தேவிக்கும் அமுதை நிவேதிக்கும், செந்தூரே-, கந்து இணையா-கட்டுத்தறியுடன் பிணித்து நில்லாத, பூ குஞ்சர துணையான்-அழகிய யானைமுகப் பெருமானுக்குத் தம்பியும், பூ தினை மாவுக்கு அலந்தான்-நிறம் வாய்ந்த தினைமாவை உண்ணும் பொருட்டு வருந்திநின்றவரும், பூக்கும் சரத்துள் நையான்-விரிந்து கிடக்கும் சஞ்சலங்களுள் அமிழ்ந்தி வருந்தாதவருமாகிய முருகப் பெருமானது, பூப்பு-மலர்வுக்குரியதலமாம்.

வி.கு

சிந்துக்கவி-காவடிச்சிந்து நொண்டிச்சிந்து ஆதியன. பாவலர்-மரபுக்கவிதையன்றிப் புதுக் கவிதையும் ஆக்கவல்லபாவலர், செல்வக்கலம்- திரைகடலோடியும் திரவியந்தேடித்தரும் கலம், அமுதுபடைத்தல்-செய்ந் நன்றி மறவாமற்படைத்தல், சரம்-மாயா சம்பந்தமான ஆன்மசஞ்சலங்கள்.

(62)

*மின்னார் முகமரையும் வீசுமணப் பொன்னடம்புந்*
*தென்கா லதர்பூக்குஞ் செந்தூரே-பன்னும்*
*பகழிக்கூத் தன்பாலன் பன்னமர்க்கே நின்ற*
*பகழிக்கூத் தன்பாலன் பற்று.*

ப-ரை

மின்னார் முக மரையும்-தேசுடையராகிய பெண்களது முகமாகிய தாமரை மலர்களும், தென் காலதர் பூக்கும்-அழகிய சாளரங்கள் தோறும் மலர்ந்து நிற்கும், செந்தூரே-, மணம் வீசும் பொன் அடம்பும்-வாசனையை வீசும் அழகிய அடப்பங்கொடிகளும், தென்கால் அதர் பூக்கும்-தென்றற் காற்றுச்சேர்ந்த நுண்மணல்களில் மலரும், செந்தூரே-, பன்னும்-விதந்துபேசும், பகழிக்கூத்தன் பால் அன்பன்-பகழிக்கூத்தர் என்னும் புலவரிடத்து அன்புடையவரும் அமர்க்கு நின்ற பகழி கூத்தன்-போர் புரிவதற்காய் நின்ற பாணக்கூத்தரும், பாலன்-பாலமுருகனுமாகிய விசாகப்பெருமானது, பற்று-விருப்புக்குரிய தலமாம்.

வி.கு

முகமரை-உருவகம், தாமரை-மரை எனமுதல் குறைந்தது, முகம் மரை எனவே அவை செந்தாமரைகளாம். தென் கால் அதர்-அழகு தோன்றும் வழிகள் என்பதும் ஒக்கும். அதர்-வழி,பகழிக்கூத்தன்-பாணங்களாற் கூத்தாடுபவன்.

பகழிக்கூத்தர் சேதுநாட்டு வீர நாராயணச்சதுர்வேதிமங்கலம் என்னும் சன்னாசிக் கிராமத்தில் தோன்றியவர். பிறப்பில் வைணவர். ஒருசமயம் வயிற்றுநோய் ஒன்று தோன்றி அவரை மிகவும் வருத்தியது மணி மந்திர மருந்துகளாலும் அந்நோய் தணியாது போகவே கூத்தர் செந்திலாண்டவனை நினைந்து பிள்ளைத்தமிழ் பாடியதும் உடல்நோயும் வினைநோயும் ஒழிந்து இன்புறும் பேறு பெற்றார்.

பின்பு அப்பிள்ளைத் தமிழைத் திருச்செந்தூர் ஆலயத்தில் ஆதீனத்தார் முன்னிலையில் அரங்கேற்றியும் கோயில் உரிமையாளர் அவருக்குச் சிறப்புச் செய்வதில் காலந்தாழ்த்தினர். அதனை நோக்கிய செந்திலான் தன் மார்பிற் கிடந்த மாணிக்கப் பதக்கத்தை புலவர்க்குச் சாத்தி மகிழ்ந்தான் என்பது வரலாறு. (63)

*சாறாரும் மாங்கனியைத் தாவுசுறா நீடிரையைச்*
*சேறாக்கிச் சிந்திவருஞ் செந்தூரே- மாறாவா*
*குக்குடத்தாற் கொன்றான் குறவர் குறும்பொழியக்*
*குக்குடத்தாற் கொன்றான் குடில்*

ப-ரை

சாறு ஆரும் மா கனியை - பிழிவு நிறைந்த மாம்பழங்களை, சேல்தாக்கி சிந்தி வரும்-சேல்மீன்கள் தாக்கிச் சிதைத்து வருகின்ற, செந்தூரே-, தாவு சுறா-பாயும் சுறாக்களும், நீள் திரையை சேறு ஆக்கி சிந்து இவரும்-நீளும் அலைகளைச் சகதியாக்கிக் கடலில் உயர்ந்து வரும், செந்தூரே-, மாறா வாகு குடத்தாற்கு ஒன்றான்-மாற்ற மடையாத புயத்தினால் திரண்டவனாகிய சூரபன்மனுடன் இணையாதவரும், குறவர் குறும்பு ஒழிய-நம்பியரசன் முதலாம் குறவரது சேட்டை நீங்குமாறு, குக்குடத்தால் கொன்றான்-கோழிச் சேவலாற் கொன்றவருமாகிய சேந்தனது, குடில்-இல்லமாகும்.

வி.கு

மா-வயல் வாய்க்கால் ஓரங்களிலுள்ள மாமரங்கள், கனியைச்சேல் தாக்கும் எனவே சேல்களின் மதர்ப்பும் அதனால் அவற்றை அங்குள்ளார் உண்ணார் என்பதும் அவரது சீவகாருணியமும் பிறவும் புலனாயின. குடம்-திரட்சி, வள்ளிநாயகியாரின் உடன்போக்கின் பின் அவரைத் தேடிச்சென்ற குறவர் இளமரக்காவில் முருகனுடன் நாயகியார் நிற்பக் கண்டு, முருகன் என்பதை அறியாது அவனுடன் போர்க்கு முனைந்தனர். அது காலை முருகன் திருவுளப்படி கொடிச்சேவல் கூவவே குறவர் அனைவரும் மாண்டனர். பின்பு குமரன் பணிப்பில் வள்ளிநாயகியார் எழுக என அவர்கள் யாவரும் எழுந்தனர் என்பது கந்தபுராணச் செய்தி. (64)

*உற்றபெருஞ் செல்வருக்கு முண்ணு மழலைகட்குஞ்*
*சிற்றால வட்டமுறுஞ் செந்தூரே -செற்றைச்*
*சயந்தன்பா லுற்றான் றகுவரையே செற்றுச்*
*சயந்தன்பா லுற்றான் றலம்.*

ப-ரை

உற்ற பெரும் செல்வருக்கும் - அங்கே தங்கிவாழும் செல்வம் படைத்தவர்க்கும், சிற்றாலவட்டம் உறும்-விசிறிகள் கைகளிற் பொருத்தியிருக்கும், செந்தூரே, உண்ணும் மழலைகட்கும் - உணவருந்தும் குழந்தைகளுக்கும், சில் தாலவட்டம் உறும்-சில வாகிய உண்கலங்கள் பொருந்தியிருக்கும், செந்தூரே-, செற்றை சயந்தன் பால் உற்றான்-தேவகூட்டத்தில் ஒருவனாய் நின்ற சயந்தனிடம் சென்றவரும், தகுவரை செற்று-அசுரர்களை அழித்து, சயம் தன் பால் உற்றான்-வெற்றிப்பக்கத்தோடும் தம்மை இணைத்துக் கொண்டவருமாகிய குமரவேளது, தலம்-கோயிலாகும்.

வி.கு

சிற்றாலவட்டம்-வெயிற்காலத்துப் புழுக்கம் போக்கும் விசிறிகள், உண்டிகள் வேறுபடுதலின் மழலைகட்குக்கலங்களும் சிலவாயின, செற்றை-கூட்டம், அது சிறையில் வாடிய தேவகூட்டம். சயந்தன் சிறையிலிருந்து வாடிய போது குமரன்கனவில் தோன்றி அவனுக்கு அபயமளித்தான் என்பது செய்தி.

(65)

## மும்மொழிச்சிலேடை

*மானையொப்பார் நீள்விழியின் மன்றிசையின் மாமலரில்*
*தேனையத் தோடிவருஞ் செந்தூரே- மோனையுறுஞ்*
*சூதங் களைந்தகன்றான் தொல்லைச்சூர் கொண்டவுருச்*
*சூதங் களைந்தகன்றான் சோ.*

ப-ரை

மானை ஒப்பார் நீள்விழியில்-பெண்மான் போல்வாராகிய மகளிரது நீண்ட விழிகளிலும், தேன் ஐயத்தோடு இவரும்-வண்டுகள் சந்தேகத்தோடு வந்து அமரும், செந்தூரே-, மன்று இசையில் -அரங்கிசை நிகழ்ச்சியில், தேன் நைய தோடி வரும்-தேனும் வருந்தத்தோடியிராகம் வந்து தோன்றும், செந்தூரே-, மா மலரில் தோடு நைய தேன் இவரும்-பெருமைக்குரிய பூக்களில் இதழ்கள் நசியவண்டுகள் அமரும், செந்தூரே-, மோனை உறும்- முதன்மை பொருந்திய, சூது அங்கு அளைந்து அகன்றான்-வஞ்சகத்தை அவ்விடத்தே தழுவி யாவரையும் கடந்தவனான, தொல்லை சூர் கொண்ட-தொந்தரை செய்யும் சூரபன்மன் எடுத்துக்கொண்ட, உரு சூதம் களைந்து அகன்றான்- வடிவமாகிய மாமரத்தை அழித்து விரிந்தவராகிய குமரனது, சோ-நகர மாகும்.

வி.கு

மானை ஒத்தல்-மருண்டபார்வையால் நிகராதல், ஐயம்-அது மலரோ விழியோ என வண்டுகளுக்குத் தோன்றும் ஐயம், மோனை-முதன்மை. அகலுதல் கடத்தல், அன்றி உடல் பூரித்தகல்தலுமாம், அகன்றான்-திருப்பெருவடிவங் கொண்டு அகன்றவன். (66)

*அண்டத் துருமேறு மாமீட்பார் கைத்தலமும்*
*செண்டைக் கரந்தையுறுஞ் செந்தூரே- கண்டவரை*
*பாலைத் தணிக்கையர் பாசத்தார் தீயெழுந்த*
*பாலைத் தணிக்கையர் பற்று.*

ப-ரை

அண்டத்து உரும் ஏறும்-ஆகாயத்தே தோன்றும் இடியேறும், செண்டைக்கு அரந்தை உறும்-செண்டை என்னும் வாத்தியத்தால் துன்பமடையும், செந்தூரே-, ஆ. மீட்பார் கைத்தலமும்-பசுக்களை மீட்டு வருவார் கைகளும், செண்டு ஐ கரந்தை உறும்-பூங் கொத்துக்களாகிய அழகிய கரந்தை மாலைகளோடு இணையும், செந்தூரே-, கண்டு அவரை பால் ஐ தண் இக்கு ஐயர் பாசத்தார்-கற்கண்டு அவரை பசும்பால் அழகிய குளிர்ந்த கரும்பு என்பவற்றை அமுது செய்யும் விநாயகக்கடவுளது அன்புக் குரியவரும், தீ எழுந்த பாலை தணிக்கையர்-அக்கினி தோன்றிய கடுஞ்சுரத்தைத் தணித்தவருமாகிய முருகனது, பற்று விருப்புக்குரியதானமாகும்.

வி.கு

செண்டை-ஒருகொட்டுவாத்தியம், அஃது இன்று கேரளக்கோயில்களில் பெரிதும் வாசிக்கப்படுவது, ஆ மீட்பார்-முன்பு பகைவர் கவர்ந்த பசுக்களை மீட்போர், கரந்தை-கொட்டைக்கரந்தை, பாலை தணித்தல்-சுரம்புகுந்தவரலாறாம். (67)

*அவ்வியமில் யோகினரு மாட லரிவையருஞ்*
*செவ்வழியா ழோதியுறுஞ் செந்தூரே -தவ்வையொடு*
*வானகத்த னாகத்தன் வாழ்த்து மலர்முகத்தன்*
*வானகத்த னாகத்தன் வாக்கு*

ப-ரை

அவ்வியம் இல் யோகினரும்-மனக்கோட்டம் இல்லாத தியான நிட்டையினரும், செவ் வழி ஆழ் ஓதி உறும்-நன்நெறியும் ஆழ்ந்த ஞானமும் பொருந்தியிருக்கும், செந்தூரே-, ஆடல் அரிவையரும்-நடன மகளிரும், செவ்வழி யாழ் ஓதி உறும்-செவ்வழிப்பண்ணை யாழோடு பாடிச்சேரும், செந்தூரே-, தவ்வை யொடு-தாயாகிய மாதுமையோடு, வால் நகத்தன்-வெள்ளிமலைச்சிவனும், ஆகு அத்தன்-எலியூரும் கடவுளாகிய விநாயகரும், வாழ்த்தும்-ஆசீர்வதிக்கின்ற, மலர் முகத்தன்-கருணை பூக்கும் திருவதனத்தரும், வான் அகத்தன்-அழகுக்கு உறைவிடமானவரும், நாகத்தன்-குன்று தோறாடுபவருமாகிய குகனது, வாக்கு-செல்வாக்கமைந்த தலமாகும்.

வி.கு

அவ்வியம் -மனக்கோட்டமென்னும் அழுக்காறு, செவ்வழி-செப்பமான வழி, அது நன்னெறி, வெள்ளிமலை-திருக்கயிலை, ஆகு-கயமுகனாகிய எலி, வான் அகத்தன்-தேவலோகத்தனுமாம்.

(68)

*கல்லாரப் பண்ணைகளுங் கார்வண்டார் சோலைகளுஞ்*
*செல்வந் தழைக்கவுயர் செந்தூரே- வில்லார்*
*புரந்தரனைப் போற்றினான் பூக்குமுயிர் தம்மைப்*
*புரந்தரனைப் போற்றினான் பூப்பு.*

ப-ரை

கல்லார பண்ணைகளும்-செங்கழுநீர் உள்ள வயல்களும், செல்வம் தழைக்க உயர்-செல்வம் செழிக்குமாறு மேம்படுகின்ற, செந்தூரே-, கார் வண்டு ஆர் சோலைகளும்- கரிய தேனீக்கள் நிறைந்த பூஞ்சோலைகளும், செல் வந்து அழைக்க உயர்-கார்மேகங்களும் புயற்காற்றும் வரவேற்குமாறு உயர்ந்திருக்கும், செந்தூரே-, வில் ஆர் புரந்தரனை போற்றினான்-வானவில்லோடு பொருந்தும் இந்திரனைப்பாதுகாத்தவரும், பூக்கும் உயிர் தம்மை புரந்து-தோன்றும் சீவராசிகளைப்பேணி, அரனை போற்றினான். தந்தையாகிய சிவபெருமானைத் துதித்தவருமாகிய கந்தவேள், பூப்பு- மலர்ந்திருக்கும் தலமாம்.

வி.கு

வில்-ஈண்டு வானவில், போற்றுதல்-துதித்தல், அதுபோர் முடிவிலும் முன்னும் துதித்தமையாம். வந்து-காற்று.

(69)

*சிந்திசையை மன்றலினுஞ் சேயிழையார் கந்தரத்துஞ்*
*செந்தார் நலங்கொழிக்குஞ் செந்தூரே-கொந்துகுழற்*
*சத்திதரு மத்தன் சரவணத்தன் நாயேற்குஞ்*
*சத்திதரு மத்தன் சரண்.*

ப-ரை

மன்றலினும்-திருமணங்களிலும், சிந்து இசையை-அரங்கிசையாகிய பாட்டிசையை, செந்து ஆர் நலங்கு ஒழிக்கும்-இசை நிறைந்த நலங்குப் பாடல்கள் தரத்தால் அழிக்கும், செந்தூரே-, சேய் இழையார் கந்தரத்தும்- சிவந்த ஆபரணங்களை அணிந்தவரான மகளிரது கழுத்திலும், செம்தார் நலம் கொழிக்கும்- செப்பமான மலர்மாலைகளது அழகு செழிக்கின்ற, செந்தூரே-, கொந்து சூழல் சத்தி தரும் அத்தன்- பூங்கொத்தணிந்த கூந்தலையுடைய உமையவள் தந்தருளிய கடவுளும், சரவணத்தன்-சரவணப் பொய்கையில் வாழ்ந்தவரும், நாயேற்கு சத்தி தரும் மத்தன்-நாயொப்பவனாகிய எனக்கும் வல்லபத்தைத் தந்தருளும் களிப்பினையுடையவருமான முருகவேளது, சரண்-வீடாகும்.

வி.கு

சிந்து இசை-பாட்டிசை, ஈண்டு அது அரங்கிசை, நலங்கு திருமணத்தம்பதிகளை ஊஞ்சலில் ஆட்டிச் சுமங்கலிகளாற் பாடப்பெறும் மங்கலப் பாடல், சத்தி தருமத்தன் எனப்பகுத்து உமையவளது புண்ணியவடிவினன் எனவும் கொள்க, மத்தம்-களிப்பு.

(70)

மாகக் கருமுகிலு மாவீரர் வாள்வேலுஞ்
சேகரத்துக் கூர்ந்துவருஞ் செந்தூரே-நாகத்
துருத்திகழுந் தீயவனல் லூருருவற் றேய்த்த
வுருத்திகழுந் தீயவனல் லூர்

ப-ரை

மாக கரு முகிலும்-ஆகாயத்தே வரும் கார்மேகங்களும், சேகரத்துக்கு ஊர்ந்து வரும்-மாமரங்களுக்குமேலாகத்தவழ்ந்து வருகின்ற, செந்தூரே-, மா வீரர் வாள் வேலும்-பெரிய போர்வீரர்களது வாள் வேல் என்பனவும், சேகு அரத்து கூர்ந்தவரும்-வைரித்த அரங்களால் கூர்மை பெற்றுவரும், செந்தூரே-, நாகத்து உருத்து இகழும் தீயவன்-பாம்புபோற் சினந்து ஏனையோரை இகழுகின்ற தீமையனும், அல் ஊர் உருவன்-இருள் போலும் வடிவினனுமாகிய சூரபன்மனை, தேய்த்த-அழித்த, உரு திகழும் தீயவன்-வடிவழகு திகழுகின்ற ஞானமேவடிவானகுமரனது, நல்ஊர்-நல்லஊராகும்.

வி.கு

தீ-அறிவு, தீயவன்-அக்கினியாயும் இருந்தவன் எனவும் பொருள் தந்தது. (71)

***வீங்குநிதிச் செல்வருநல் வீயலரும் வாவிகளுந்***
***தேங்கொக் கலைத்தழுவுஞ் செந்தூரே-பூங்கருணை***
***வாலிபவி ருத்தன் மணங்கூட்ட நின்றகுற***
***வாலிபவி ருத்தன் மனை.***

ப-ரை

வீங்கு நிதி செல்வரும்-உளம் பூரிக்கும் பொன்படைத்த செல்வர்களும், தேங்கு ஒக்கலை தழுவும்-மிகுந்த சுற்றங்களையும் தழுவிக்கொள்ளும், செந்தூரே-, வீ அலரும் வாவிகளும்-மலர்கள் பூக்கும் தடாகங்களும், தேம் கொக்கு அலை தழுவும்-தேமா மரங்களைத்திரைகளால் அணைக்கும், செந்தூரே-,

பூ கருணை வால் இப விருத்தன்-அழகிய கிருபையுடைய தூய ஆனைமுகனான பழமையோன், மணம் கூட்ட நின்ற-களவுத்திருமணத்தைக் கூட்டிநிற்கப்புனத்தில் நின்றருளிய, குற வாலிப விருத்தன்-வேட்டுவக்காளையும் புதிய முதிய வருமாகிய செவ்வேளது, மனை-இல்லமாகும்.

வி.கு

நிதிச்செல்வர்-செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல் என்பதை உணர்ந்த செல்வர். இப விருத்தன்-விநாயகர். (72)

*கல்லணைசேர் கந்துகத்துங் கார்மயில்கள் காவகத்துஞ்*
*செல்வ ருகைத்தேறுஞ் செந்தூரே-வில்லான*
*மாணிக்க ரூபன் மயங்கவே ளாயினான்*
*மாணிக்க ரூபன் மனை.*

ப-ரை

கல்லணை சேர் கந்துகத்தும்-சேணம் பொருந்திய குதிரைகள் மீதும், செல்வர் உகைத்து ஏறும்-நிதிபடைத்தவர்கள் உயரத்தாவி ஏறும், செந்தூரே-, கா அகத்தும்-சோலைகளிடத்தும், கார் மயில்கள்-நீல மயில்கள், செல் வருகை தேறும்-கார் முகில்களது வருகையைத் தெளிந்து கொள்ளும், செந்தூரே வில் ஆன மாண் இக்கு அரூபன்-வில்லாகிய மாட்சிமை பொருந்திய கரும்பினையுடைய உருவந்தோன்றாத மன்மதன், மயங்க வேள் ஆயினான்-மயக்கமுறச் செவ்வேளாகியவரும், மாணிக்க ரூபன்-மாணிக்க வடிவினருமாகிய குமரவேளது, மனை-இல்லமாகும்.

வி.கு

கரு முகில் கண்டு மயில்கள் ஆடுதலே செல்வருகைத்தேறலாம். அருபன் உருவற்ற மன்மதன். சிவன் நெற்றிக்கண்ணால் மன்மதனை நீறாக்கிய பின்னர் இரதி தேவி வேண்டிநிற்க அவள் விழிகளுக்கே தோன்றுமாறு வழங்கிய வடிவத்தினன்அம்மன்மதன் என்பது செய்தி. மாணிக்கம்-சிவப்புக்கல்.

(73)

*தேவகுலத் தந்திகளுந் தீரமுறு காளையருஞ்*
*சேவகத்துக் கோடியுறுஞ் செந்தூரே-காவற்*
*பரிபா லனத்தன் பதத்துயர்ந்தா னண்டப்*
*பரிபா லனத்தன் பதி.*

ப-ரை

தேவகுல தந்திகளும்-திருக்கோயில் யானைகளும், சேவகத்துக்கு ஓடி உறும்-யானைகள் துயிலுமிடத்துக்கு ஓடித்தங்கும், செந்தூரே-, தீரம் உறும் காளையரும்-தைரியம் மிக்க கட்டிளைமையோரும், சேவகத்து கோடி உறும்-ஊழியத்தின் எல்லையைப் பொருந்தும், செந்தூரே-, காவல்-சிறையின்கண், பரி-வருந்திய, பால் அனத்தன்-பால்நிறங்கொண்ட அன்னவாகனனாகிய பிரமனது, பதத்து உயர்ந்தான்-படைத்தலாகிய பதவியில் உயர்ந்து நின்றவரும், அண்ட பரிபாலனத்தன்-பிரபஞ்ச ஆட்சியரும் ஆகிய சண்முகனது, பதி-திருத்தலமாகும்.

வி.கு

. தந்திகள் சேவகத்துக்கு ஓடிவருதல்-கோயில் தொண்டாற்றியபின் ஓய்வு பெறயானைகள் வருதல். சேவகம்-ஊழியத்தோடு வீரம் எனவும் நின்றது. சேவகத்துக் கோடி-ஊழியத்தில் புதியனவும் ஆகும், தாரகப்பொருள் தெரியாப் பிரமனைச் சிறையில் வைத்துத்தானே அவன் தொழிலைச்செய்தமை பதத்து உயர்தல் ஆகும். (74)

அங்கனையார் பொன்னணியு மாட லரிவையருஞ்
சிங்கச் சுவணமுறாச்செந்தூரே-பொங்கசுரன்
நாரதச காயன் நடலைச்சூர் தேய்த்தான்சீர்
நாரதச காயன் நகர்.

ப-ரை

அங்கனையார் பொன் அணியும்-மகளிரது பொன்னாலாய ஆபரணங்களும், சிங்கச்சுவணம் உறா-பேர்பெற்ற பொன்னோடும் பொருந்தாத, செந்தூரே-, ஆடல் அரிவையரும்-நடனமங்கையரும், சிங்கு அச்சு வணம் உறா-குறைந்த மேனியழகைக்கொணடிராத, செந்தூரே-, பொங்கு அசுரன்-சினக்கின்ற அசுர குலத்தவனும், நார் அத சகாயன்-அன்பை அழிக்கத்துணை நின்றவனும், நடலைசூர் தேய்த்தான்-வஞ்சகனுமாகிய சூரபன்மனை அழித்தவரும், சீர் நாரத சகாயன்-சிறப்புடைய நாரத முனிவர்க்குச் சகாயமாய் நின்றவருமாகிய முருகவேளது, நகர்-நகரமாகும்.

வி.கு

சிங்கச்சுவணம்-பேர்பெற்றபொன், ஆடகம், கிளிச்சிறை சாம்புநதம் என்பவற்றிலும் மாற்றிலுயர்ந்தது. சுவர்ணம்-சுவணமாயிற்று, வர்ணம் வணம் எனநின்றது. பொருந்தும் என்றால் தம் அழகை அவை கெடுக்கும் என்பது கருத்தாம். நாரத சகாயன்-நாரதரது துணையும் பெற்றவன் எனினும் ஒக்கும். அதுவள்ளி திருமணத்துணையாம்.

(75)

*பொங்கு தளையினும்பூம் பொன்னனையார் சேக்கையினுஞ்*
*சிங்கார மோகமுறுஞ் செந்தூரே-துங்கமிகும்*
*வேறாங்கு கையான் விராலிமலை வேங்கடத்து*
*வேறாங்கு கையான் விருப்பு*

ப-ரை

பொங்கு தளையினும் சிங்கார்-மிகுகின்ற பாசங்களிற் சிக்கிக்கொள்ளாதவரது, அம் ஓகம் உறும் -அழகிய பெருங்கூட்டங்கள் மிகுந்திருக்கும், செந்தூரே-, பூ பொன் அனையார்-செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளொப்பாராகிய மகளிரும், சேக்கையினும்-படுக்கையின்கண், சிங்கார மோகம் உறும்-சிற்றின்பச் சுவை தரும் மயக்கத்தோடு பொருந்தும், செந்தூரே-, துங்கம் மிகும் வேல் தாங்கு கையான்-உயர்வு மிகும் வேற்படைக்கலத்தைத் தாங்குகின்ற திருக்கரத்தினரும், விராலி மலை-விராலி மலையோடு, வேம்கடத்து வேறு ஆம் குகையான்-திருவேங்கடத்தினின்றும் வேறாகிய குகையிடத்து முள்ளவருமாகிய முருகப்பெருமானது, விருப்பு-விருப்பத்துக்குரியதலமாகும்.

வி.கு

சிங்கார்-தன்வினைப்பொருள் தந்தது, பூ-அழகுமாம், துங்கம் மிகும் வேல்-சிவன் வழங்கியமையாலும் முருகனுக்கு ஞானசத்தியாய் நிற்பதாலும் சூரபன்மன் ஆகியோரை அழித்துத் தேவர்களைக் காத்தமையாலும் தோன்றிய உயர்வாம். தாயாகிய உமையோடு முனிவு கொண்டு சுவாமி மலையைக் கடந்து பின்பு பாதலஞ்சென்று ஒரு குகை வழியாக வந்தவன் செவ்வேள், அவ்வரலாற்றைக் கந்தபுராணத்து வழிநடைப் படலத்துக் காண்க. விராலிமலை-ஆறுபடை வீடுகளில் ஒன்று. (76)

***கந்தன் றிருப்புகழுங் காளைப்போர்க் காளியருஞ்***
***சிந்துரக்கப் பாடவெழுஞ் செந்தூரே -சந்ததமுங்***
***கோடற் புயத்தன் கொழுங்கருணை யெற்களித்தான்***
***கோடற் புயத்தன் குடில்.***

ப-ரை

கந்தன் திரு புகழும்-கந்தவேளது அழகிய பிரபாவங்களும், சிந்து உரக்க பாட எழும்-கடலானது வலுவடையுமாறுபாட உயர்ந்து எழுகின்ற, செந்தூரே-, காளை போர்க்கு-கொல்லேறு தழுவுதலாகிய போருக்கு, ஆளியரும்-சிங்கேறு ஒக்கும் வீரரும், சிந்துர கப்பு ஆட எழும்-யானைபோலும் புயங்கள் அசையுமாறு எழுந்து வரும், செந்தூரே-, சந்ததமும்-எப்பொழுதும், கோடு அற்பு உய-எனதுகோணிய அன்பு நீங்கும் வண்ணம், எற்கு தன் கொழும் கருணை அளித்தான்-அடியேனுக்குத்தனது செழித்த கிருபையை வழங்கியவரும், கோடல் புயத்தன்-காந்தள் மலர் மாலை தாங்கும் தோளினருமாகிய அறுமுகனது, குடில்-இல்லமாகும்.

வி.கு

உரக்கப்பாடுதல்-பேரொலியாய்ப்பாடுதல், புகழ் எழுதல்-புகழானது எங்கும் பரந்து உயர்தல், கோடல்-வெண்காந்தள் (77)

*வாங்கலவன் றண்மலரை வாரணங்க ணித்திலத்தைத்*
*தேங்குவளைக் 'கண்ணிறைக்குஞ் செந்தூரே-ஏங்குமனப்*
*போதன் றலைக்குனித்தான் போர்க்காழி மேனடந்த*
*போதன் றலைக்குனித்தான் பூப்பு.*

ப-ரை

வாங்கு அலவன்-வளைவு கொண்டநண்டுகள், தண்மலரை-குளிர்ந்த பூக்களை, தேங்கு வளை கண் நிறைக்கும்-எங்குமாய் நிறைந்த பொந்துகளில் நிரப்பும், செந்தூரே-, வாரணங்கள்-சங்குகள், நித்திலத்தை தேம் குவளை கண் இறைக்கும்-முத்துக்களைத் தேன்பொருந்திய ஆம்பல் மலர்களிற் சொரியும், செந்தூரே-, ஏங்கு மன போதன் தலை குனித்தான்-அஞ்சிய நெஞ்சுடைய பிரமதேவரது தலையைக்குட்டி வளைத்தவரும், அன்று போர்க்கு ஆழி மேல் நடந்த போது- அன்றைய தினத்தில் யுத்தத்தின் பொருட்டு சமுத்திரத்தின் மேலாகச் சென்ற வேளையில், அலை குனித்தான்-கடலைத் தாண்டிக்குதித்தவருமாகிய இளமுருகனது, பூப்பு-திருவுளமலர்வுக்குரிய இடமாம்.

வி.கு

ஏங்குதல்-துன்பமுமாம்

(78)

*செல்லுந்தேர் பொற்றாதாற் சேறார் கழியிடத்தாற்*
*சில்லை மலர்ந்துயருஞ் செந்தூரே -கல்லார*
*மாதரங்க மாட்டினான் மாதங்கப் பெண்குறத்தி*
*மாதரங்க மாட்டினான் மாண்பு*

ப-ரை

செல்லுந் தேர் சில்லை-வீதிகளிற் செல்லுகின்ற தேர்களின் சில்லுகளானவை, பொன் தாதால் மலர்ந்து உயரும்-பொன் வண்ண மகரந்தங்களோடு பூத்து ஏற்றம்பெறும், செந்தூரே-, சேறு ஆர் கழி இடத்தால்-சகதி நிறைந்த உப்பங்கழிகளாகிய இடங்களில், சில்லை மலர்ந்து உயரும்-நீர்வாழ்பறவைகள் பரந்து உயர்ந்து பறக்கும் செந்தூரே-, கல்லார மா தரங்கம் ஆட்டினான்-செங்கழுநீர் மலர்ந்த சரவணத்துள்ள பெரிய அலைகளை அலைவு செய்தவரும், மாதங்க பெண் குறத்தி மாதர் அங்கம் மாட்டினான்-தேவயானை குறமகளாகிய வள்ளி என்னும் இருபெண்களதும் அங்கங்களைத் தன்னோடும் இணைத்துக் கொண்ட வருமாகிய விசாகனது, மாண்பு-மாட்சிமைக்கமைந்த தானம் ஆகும்.

வி.கு

தேர் மகரந்தம் சோலை நிறைவைப் புலப்படுத்தியது. சில்லை - நீர்வாழ்ப்பறவைகள், அவை நாரை, கொக்கு அன்றில் ஆகியவை, பறவை மிகுதி அங்குள்ள மீன்வளத்தைக்காட்டியது. சரவண அலைவு முருகனது பாலலீலைக்குரியதாம். மாட்டினான்-பக்கங்களையுடைய வனுமாம். மாடு பக்கம், பொற்றாதால், இடத்தால்-உருபுமயக்கங்கள். (79)

*பன்னுமெழிற் காவிடத்தும் பாவும் வளாகமெங்குஞ்*
*சென்னித் தலம்பூக்குஞ் செந்தூரே-மன்னிவரும்*
*ஆறுதலங் கண்டா னகந்தைக் கிழங்கெடுப்ப*
*ஆறுதலங் கண்டா னகம்.*

ப-ரை

பன்னும் எழில் கா இடத்தும்-விதந்து பேசப்படும் அழகிய சோலைக்கண்ணும், செல் நித்தல் அம்பு ஊக்கும்-கார்மேகங்கள் நாடோறும் மழை நீரை மிகுவிக்கும், செந்தூரே-, பாவும் வளாகம் எங்கும்-பரக்கும் அயலிடங்களாகிய எவ்விடமும், சென்னி தலம் பூக்கும்-சோழ நாடாகவே மலர்ந்திருக்கும் செந்தூரே-, மன்னி வரும் ஆறுதல்-நிலைத்து வருகின்ற மனச்சாந்தியோடு, அங்கு அண்டான்-அந்த மகேந்திராபுரியில் நெருங்கிநில்லாதவனாகிய சூரபன்மனது, அகந்தை கிழங்கு எடுப்ப-ஆணவமாகிய மூலத்தை எடுக்கும் பொருட்டு, ஆறு தலம் கண்டான்-அதற்காய வழியையும் அவ்வழித் தலங்களையும் நோக்கியவராகிய செவ்வேளது, அகம்-இல்லமாகும்.

வி.கு

மழைப்பொழிவு அங்குள்ளாரது அறச்செயலை வெளிப்படுத்தியது. சென்னித்தலம்-சோழவளநாடு சோறுடைத்து என்னும் பெருமையை உடையது. அந்தவளம் செந்தூரிலும் உள்ளவாறாயிற்று, ஆறு தலம்- உம்மைத்தொகை. ஆறுதலம்-வழி நடைப்படல வரலாறு. (80)

*முந்தாயர் கைவிளிக்கு மோகமுறுந் தோகையர்க்குஞ்*
*சிந்தா குலங்கூட்டுஞ் செந்தூரே-கந்தமிகுங்*
*கஞ்ச மனத்தலையான் காண்பரியான் காதலன்றீக்*
*கஞ்ச மனத்தலையான் காப்பு*

ப-ரை

முந்து ஆயர் கைவிளிக்கும்-முதன்மைபெறும் இடையரது சீழ்க்கைக்கும், சிந்து ஆ குலம் கூட்டும்-சிதைந்த பசுக்கூட்டங்கள் தம்மை ஒன்றுகூட்டும், செந்தூரே-, மோகம் உறும் தோகையர்க்கும் காமமயக்கம் மிக்குநிற்கும் மகளிர்க்கும், சிந்து ஆகுலம் கூட்டும்- கடலானது விரகத்துன்பத்தை மேலும் மிகச்செய்யும், செந்தூரே-, கந்தம் மிகும் கஞ்சமன் - நறுமணம் மிகுந்துள்ள தாமரை ஆசனராகிய பிரமதேவரும், நத்து அலையான் - சங்குகள் உலாவும் திரைக்கடலராகிய திருமாலும், காண்பு அரியான் காதலன்-காணுதற்கு அரியராகிய சிவனுக்குமைந்தனும், தீ கஞ்ச மனத்து அலையான்-தீய வஞ்ச நெஞ்சங்களில் உலவுதல் செய்யாதவனுமாகிய முருகனது, காப்பு-காவலுக்கமைந்த தலமாம்.

வி.கு

முந்து ஆயர்-தம் குலத்தொழிலில் முதன்மை பெறும் இடையர். கைவிளிவாயால் அழைக்காது கைவிரலை வாயில் வைத்து ஒலி எழுப்பி அழைக்கும் சீழ்க்கை, அது சீட்டி எனவும் பேசப்படும். மோகமுறுந் தோகையர் - பொருண்மேலும் பிறவற்றாலும் பிரிந்து சென்ற தலைவரைப் பிரிந்து விரகமுறும் மகளிர். விரகந்தரும் இயற்கை நிகழ்வுகளில் கடலொலியும் ஒன்றாம். சிந்து-ஈண்டு செந்தூர்க்கடல்,காண்பு தொழிற்பெயர்.

(81)

*கல்லுயர்ந்த கோபுரமுங் கஞ்சமுறுந் தண்கயலுஞ்*
*செல்வராற் கோடியெழுஞ் செந்தூரே - வல்லரணப்*
*பாடிக் குலவினான் பாதுகையுந் தேயமேற்*
*பாடிக் குலவினான் பற்று.*

ப-ரை

கல் உயர்ந்த கோபுரமும்-மலைபோல் உயர்ந்த கோயிற் கோபுரங்களும், செல்வரால் கோடி எழும்-ஐசுவரியம் படைத்தவர்களால் புதியனவாய் உயர்ந்து எழுகின்ற. செந்தூரே-, கஞ்சம் உறும் தண் கயலும்-நீரோடு பொருந்திய குளிர்ந்த கயல்மீன்களும், செல் வராற்கு ஓடி எழும் - பின் தொடர்ந்து செல்லும் வரால் மீன்களுக்கு அஞ்சிப்பாய்ந்து உயர எழுகின்ற, செந்தூரே-, வல் அரண பாடி குலவினான்-வலிய காவற்காடமைந்த பாசறைக்கண் விளங்கியவரும், பாதுகையும் தேய-பாதணியும் தேயுமாறு, மேற்பாடிக்கு உலவினான்-வள்ளியின் சிற்றூராகிய மேற்பாடிக்குச் சென்று உலாவியவருமாகிய கந்தவேளது, பற்று-வீருப்புக்குரிய பதியாம்.

வி.கு

கல் உயர்ந்த கோபுரம்-கல்லால் உயர்ந்த கோபுரமுமாம் கோடி-கோடி அளவுமாம். வரால்-பெரிய மீன்வருக்கம், அரணம்-மதில் எனினும் ஒக்கும்.

(82)

*நவ்விவிழி யார்கொளுவு நற்சுடரும் பூம்பொழிலுஞ்*
*செவ்வந்திப் போதலருஞ் செந்தூரே-திவ்வியஞ்சேர்*
*வாசவனத் தையன் மலர்க்கரத்தே காப்பிட்டான்*
*வாசவனத் தையன் மனை.*

ப-ரை

நவ்வி விழியார் கொளுவும் நல்சுடரும்-மான் நோக்குடையராகிய மகளிரேற்றும் நல்ல தீபங்களும், செவ் அந்தி போது அலரும்-சிவந்த அந்திவேளையில் மலர்கின்ற, செந்தூரே-, பூ பொழிலும் - அழகிய சோலைகளும், செவ்வந்தி போது அலரும்-செவ்வந்தி மலர்களோடும் விரிகின்ற, செந்தூரே-, திவ்வியம் சேர் வாச வன தையல்-தெய்வீகம் சேர்ந்த இருப்பிடமாகிய குறிஞ்சிக்காட்டினளாய வள்ளியது. மலர் கரத்து காப்பு இட்டான்-மலர் போலும் கைகளில் வளையலை இட்டுக் கொண்டவரும், வாசவன் நத்து ஐயன்-இந்திரன் விரும்பிய கடவுளுமாகிய குகனது, மனை-இல்லமாகும்.

வி.கு

நற்சுடர்-மாலைப்பொழுதில் மஞ்சளரைத் தேகுளித்துக்கொளுவும் நற்சுடர். செவ்வந்தி-மலர்விசேடம், அது முருகனுக்காயமலர். திவ்வியம்-வள்ளிநாயகியார் தோன்றியதாலன்றி முருகப்பெருமானது திருவடி பதிந்தமையாலும் தோன்றிய திவ்வியம். வாசவனம்-நறுமணங் கமழும் வனமுமாம். தேவர்சிறை மீட்டமை இந்திரன் விரும்புதலுக்கு ஏதுவாயிற்று.

(83)

*ஏலக் குழலார்த மிட்டிடையும் வாள்விழியுஞ்*
*சேலம்பட் டோங்கிவருஞ் செந்தூரே-கோலமிகும்*
*பூதரத்த ணாகரத்தன் போர்க்களத்தே முன்னின்ற*
*பூதரத்த ணாகரத்தன் பூப்பு*

ப-ரை

ஏலம் குழலார் தம் இட்டிடையும்-மயிர்ச் சாந்தணிந்த கூந்தலராகிய பெண்களது சிறிய இடைகளும், பட்டு சேலம் ஓங்கிவரும்-பட்டாடைகளோடு உயர்ந்துவருகின்ற, செந்தூரே-, வாள் விழியும்-அவர்தம் வாள் போலும் கண்களும், சேல் அம்பு அட்டு ஓங்கி வரும்-சேல்மீனையும் பாணத்தையும் அழித்து மேம்பட்டுவரும் செந்தூரே-, கோலம் மிகும் பூதரத்தன்-அழகால் உயர்ந்த குறிஞ்சி நிலத்தவனும், நாகு அரத்தன்-இளஞ்செவ்வண்ணத்தனும், போர் களத்து முன் நின்ற பூதர் அத்தன்-யுத்தபூமியில் முன்னணிப் படையாய் நின்ற பூத கணங்கட்குக்கடவுளும், ஆகரத்தன்-யாவற்றிற்கும் உறைவிடமானவனுமாகிய குமரனது, பூப்பு-மலர்வுக்குரிய தலமாம்.

வி.கு

சேலம்-ஆடை, அ·.து இன்று சேலை எனத் திரிந்தது. சேலம்பட்டு எனக்கூட்டிச் சேலத்துப்பட்டு எனவும் பொருள் கொள்க. சேல்-மீன் வருக்கம், அது பிறழ்ச்சி, வடிவம் என்பவற்றால் உவமம் பெற்றது. விழி வாளானமை அவற்றை அழிக்க ஏதுவாயிற்று. பூதரம்-மலை, நான்காம் அடியை, பூதர் அத்தன் நாகர் அத்தன் எனப்பகுத்துப்பூதருக்கும் தேவர்களுக்கும் அத்தன் எனவும் பொருள் கொள்க. (84)

*வெய்யகடு வன்செருக்கால் வேளாளர் பேருழவாற்*
*செய்யதிர நாவலெழுஞ் செந்தூரே - தெய்வ*
*மலைச்சி கரத்தணைந்தான் வான்கயிலைக் கந்த*
*மலைச்சி கரத்தணைந்தான் வாக்கு.*

ப-ரை

வெய்ய கடுவன்-கொடுமையான குரங்குகள், செருக்கால் செய்ய திர நாவல் எழும்-பெருமகிழ்வால் பெரிய உறுதியான நாவல் மரங்களில் பாய்ந்து ஏறும், செந்தூரே-, வேளாளர்-வேளாண் உழவரது, பேர் உழவால்-பெரிய உழுதொழிலால், செய் அதிர நாவல் எழும்-வயலிடங்கள். அதிரும்படியாக நாவலோ என்னும் ஒலி எழுகின்ற. செந்தூரே-, தெய்வ மலைச்சி கரத்து அணைந்தான்-தெய்வமாகிய பார்ப்பதியின் கைகளில் அணைந்தவரும், வான் கயிலை-பெரிய திருக்கயிலையைச் சார்ந்த, கந்த மலை சிகரத்து அணைந்தான்-கந்தகிரியின் முகட்டில் கோயில் கொண்டு இணைந்திருந்தவருமாகிய முருகனது, வாக்கு செல்வாக்கமைந்த தலமாம்.

வி.கு

கடுவன் -ஆண்குரங்கு, வெய்ய கடுவன்-விரையுங்கடுவனுமாம். செருக்கு -பெருமகிழ்ச்சியோடு அகந்தையுமாம். செய்யதிரநாவல் எனக்கூட்டி-வயலிடத்தனவாகிய உறுதியான நாவல் எனவும் பொருள் கொள்க. நாவல்-பகடு பூட்டி உழுவோர் இசைக்கும் ஒலி, தெய்வமலை-ஈண்டு இமயம், பார்ப்பதி-பருப்பதத்திருப்பவள், அவள் உமை, பருப்பதம்-மலை, (85)

*கானுயருங் கோதையினுங் காவிமலர் பண்ணையினுந்*
*தேனுகரும் புள்ளுறையுஞ் செந்தூரே - வானுயர்ந்த*
*தந்த மதத்தவன் தம்பிதமி யேற்குமளி*
*தந்த மதத்தவன் சார்பு*

ப-ரை

கான் உயரும் கோதையினும்-நறுமணத்தால் உயர்ந்த மகளிர் மாலைகளிலும், தேன் நுகரும் புள் உறையும்-தேனுண்ணும் வண்டுகள் தங்குகின்ற, செந்தூரே-, காவி மலர் பண்ணையினும்-நீலோற்பலங்கள் பூக்கும் வயல்களிலும், தேனு கரும்பு உள் உறையும்-பசுக்கள் கரும்பினுள்ளே தங்கும், செந்தூரே-, வான் உயர்ந்த தந்தம் மதத்தவன் தம்பி-வானத்தே உயர்ந்த ஒற்றைக்கொம்போடு மும்மதமும் உள்ள விநாயகப் பெருமானுக்குத்தம்பியும், தமியேற்கும் - தனித்தவனாகிய எனக்கும், அளி தந்த மதத்தவன்-கருணையை வழங்கிய மகிழ்வுக்குரியவருமாகிய முருகனது, சார்பு-இடமாம்.

வி.கு

கோதை - மகளிர் அணிவது. தேனு-எருமை எனவும் நின்றது. கரும்பால் பசுக்களுக்கும் எருமைகளுக்கும் காவிகள் வேண்டாவாயின.

(86)

*போராடன் மீளியர்க்கும் பூக்குபெருஞ் சாந்திக்குந்*
*தேரார் மறுகிவருஞ் செந்தூரே - பாராரும்*
*பீடீரத் தானந்தன் பேதையரை யாட்கொண்ட*
*பீடீரத் தானந்தன் பேடு*

ப-ரை

போர்ஆடல் மீளியர்க்கும்-போரில் வெற்றி கொள்ளும் வீரர்களுக்கும், தேரார் மறுகி வரும்-பகைவர்கள் கலக்க முற்றுவருகின்ற, செந்தூரே- பூக்கு பெரும் சாந்திக்கும்-ஆண்டு தோறும் தோன்றும் திருவிழாவுக்கும், தேர் - தேர்களானவை, ஆர் மறுகு இவரும்-நிறைந்த வீதிகள் தோறும் உயர்ந்து தோன்றும், செந்தூரே-, பார் ஆரும் பீள் தீர தான்-மண்ணோடு இணையும் கரு ஒழியும் பொருட்டே, நந்தன் பேதையரை ஆட்கொண்ட-திருமால் புதல்வியரைத் தொழும்பு கொண்டருளிய, பீடு ஈரத்து ஆனந்தன் பெருமையோடு கருணையுமுடைய நித்தியானந்தராகிய சேந்தனது, பேடு-ஊராம்.

வி.கு

ஆடல் -வெற்றி ஆடுதலுமாகும். வருதல்-பகைவர் தொன்று தொட்டுக்கலங்கிவருதல், பெருஞ்சாந்தி-மகோற்சவம், பீள்-கரு, அது பிறப்புக்குறித்தது. நந்தன்-சங்கேந்திய திருமால், பேதையர்-அமிர்தவல்லி சுந்தரவல்லி என்னும் புதல்வியர். அவர்கள் முருகனால் ஆட்கொள்ளப் பெற்றுத்தேவயானை வள்ளிநாயகியார் ஆயினார். பேடு-ஊர், அது இன்று பேட்டை ஆயிற்று இதற்குத் தமிழ்நாட்டுப் பேட்டைகளை நினைவு கொள்க. தான்-ஏகாரப் பொருள் தந்தது. ஈரம்-அன்பு அது கருணையாம்.

(87)

*உள்ளுணர்ந்த ஞானியரு மொண்மணியை யாழ்கடலுந்*
*தெள்ளியலைக் கண்டுவக்குஞ் செந்தூரே -கள்ளநெஞ்சன்*
*அஞ்சரணத் தாக்கினா னண்டரூர் காத்தபயம்*
*அஞ்சரணத் தாக்கினா னாட்டு.*

ப-ரை

உள் உணர்ந்த ஞானியரும்-அகத்தே உணர்ந்த மெய்யறிவினரும், தெள் இயலை கண்டு உவக்கும்-தெளிவு பெற்ற இயற்றமிழ் நூல்களைப் பார்த்து மகிழும், செந்தூரே-, ஆழ்கடலும்-ஆழமான சமுத்திரமும், ஒள் மணியை தெள்ளி அலை கண் துவக்கும்-ஒளிர்கின்ற முத்து மணிகளைக் கொழித்துத்திரையிற் பிணிக்கும், செந்தூரே-, கள்ள நெஞ்சன்-வஞ்ச மனத்தனாய சூரபன்மனது, அஞ்சு அரண தாக்கினான்-எவரும் அஞ்ச நின்ற மதில் தாக்கத்தால், அண்டர் ஊர் காத்து-தேவலோகத்தைப் பாதுகாத்து, அபயம்-அவர்களுக்குரிய அடைக்கலத்தையும், அம் சரணத்து ஆக்கினான்-அழகிய திருவடிகளால் ஆக்கிக்கொண்டவராகிய குமரனது, ஆட்டு -திருவிளையாட்டமைந்த பதியாம்.

வி.கு

இயல்-இயற்றமிழ். அது மூவர் தமிழ் திருவாசகம், திருமந்திரம் திருக்குறள் ஆகியவற்றை அடக்கி நின்றது. தெள் இயல்-தெளிந்த இயற்கைத்தத்துவமான பிரபஞ்ச இயலுமாம். அரணம்-மகேந்திராபுரியைச்சூழ்ந்திருந்த மதில். தாக்கு-அழிப்பு, தாக்கினான்-ஆன் உருபு ஏற்றது. (88)

*கொஞ்சுமொழிக் கோதையருஞ் கூட்டளிசேர் தேங்கூடுஞ்*
*செஞ்சாலித் தாள்சூழுஞ் செந்தூரே-சஞ்சலந்தீர்*
*மந்திரத்தர் தந்திரத்தர் மாண்பார் வயலூர்சேர்*
*மந்திரத்தர் தந்திரத்தர் வாக்கு*

ப-ரை

கொஞ்சு மொழி கோதையரும்-மழலை மொழி பேசும் மகளிரும், செம்சாலி தாள் சூழும்-செப்பமான அருந்ததியின் பாதங்களைச் சிந்திக்கும், செந்தூரே-, கூட்டு அளி சேர் தேம் கூடும்-திரளும் வண்டுகள் வந்து கூடும் தேன்கூடுகளும், செம் சாலி தாள் சூழும்-செந்நெல் தாள்களில் சூழ்ந்திருக்கும், செந்தூரே, சஞ்சலம் தீர் மந்திரத்தர்-துன்பம் போக்கும் மறைமொழியாளரும், தந்திரத்தர்-ஆகமவடிவினரும், மாண்பு ஆர் வயலூர் சேர் மந்திரத்தர் -மாட்சிமை நிறைந்த வயலூரைச்சேர்ந்த ஆலயத்துள்ளவரும், தம் திரத்தர்-தமக்கேயமைந்த நிலைபேற்றினை உடையவருமாகிய குமரவேளது, வாக்கு-செல்வாக்கமைந்த தலமாம்.

வி.கு

கொஞ்சு மொழி-கொஞ்சும் விருப்பூட்டுமொழி. அது மழலை, கோதை-மகளிர் மாலை, சூழ்தல்-ஈண்டு தியானித்தல், அதனால் அங்குள்ள மகளிரது கற்புமேம்பாடு புலனாயது. சாலித்தாள்-நெற்றாள், 'அரிதாள் அறுத்துவர மறுநாள் பயிராகும். மறுதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடு கட்டும்' என்பது அல்லி அரசாணி மாலை. வயலூர்-அருணகிரிநாதர் உபதேசம் பெற்ற முருகதலம். (89)

*தாரைக் கருமுகிலைத் தாமரைக்கைக் கான்முளையைத்*
*தேரை வணங்கவருஞ் செந்தூரே - சூரைவென்ற*
*மூங்கைக் குரவோன் முதுநூற் குரைதந்த*
*மூங்கைக் குரவோன் முழக்கு*

ப-ரை

தாரை கரு முகிலை-மழையாகிய நீரொழுக்கைத் தரும் கார் மேகங்களை, தேரை வணங்க வரும்-தவளைகள் வணங்கும் பொருட்டு நீர் மேல் எழுந்து வரும், செந்தூரே-, தாமரை கை கான்முளையை - தாமரை மலர்போலும் கைகளையுடைய குழந்தைகளை, தேர் ஐ வணம் கவரும்- சிறு தேர்களின் ஐந்து நிறங்களும் கவர்ந்து நிற்கும், செந்தூரே-, சூரை வென்ற சூரபன்மனை வெற்றி கொண்ட, மூம் கைக்கு உரவோன்-முதிர்ந்த ஆற்றலுக்கமைந்த ஞானத்தையுடையவரும், முதுநூற்கு உரை தந்த-பழய இறையனார் அகப்பொருள் நூலுக்கு மெய்யுரை வழங்கிய, மூங்கை குரவோன்-ஊமைத் தேசிகருமாய முருகனது, முழக்கு-ஆரவாரத்துக்குரிய தலமாம்.

வி.கு

தாரை-நீர் ஒழுக்கு, அது மழை குறித்தது. 'நின்று புயல்வானம் பொழிந்த நெடுந்தாரை' இது புகழேந்திவாக்கு. மழை மிகுதி மகிழ்வைக் கொடுத்த வாற்றால் தவளைகள் கார் முகிலை வணங்க எழுந்தன என்பதாம். ஐ வணம்-ஐந்து நிறங்கள், அவை வெண்மை கருமை செம்மை பசுமை பொன்மை என்பன. ஐவணம்-அழகு வண்ணமுமாம்.

மூம்-பெயரெச்சம், மூ என்னும் வினையடியிற் பிறந்தது. கை-ஆற்றல், உரவு-ஞானம், அது சூரபன்மன் என்னும் ஆணவ இருளை வென்ற மெய்ஞ்ஞானம். முதுநூல்-தமிழிற் தோன்றிய அகப்பொருள் தந்த பழய இலக்கணநூ லாகிய இறையனார் அகப்பொருள். மூங்கைக்குரவோன்-மதுரையில் வைசிய குலத்தில் உருத்திரசன்மராய்த் தோன்றிய ஊமைப்புலவன். அவன் கண்ணீர் சிந்தி நக்கீரர் உரையையே மெய்யுரையாகக்கண்டவன். அவனே தாயாகிய உமையவள் இட்டசாபத்தினால் ஊமையாய்த் தோன்றிய முருகன். அது தத்துவம் அடங்கியவரலாறு. (90)

*எங்குமுள சத்திரத்து மீச னமர்விடத்துஞ்*
*சிங்கா தனம்பொலியுஞ் செந்தூரே-பொங்கித்*
*தருக்கப் புறத்தான் றலமுளைத்தா னென்றுந்*
*தருக்கப் புறத்தான் றலம்*

ப-ரை

எங்கும் உள சத்திரத்தும்-எல்லா இடங்களிலுமுள்ள அன்னசாலைகளிலும், அனம் சிங்காது பொலியும்-சோறு குறையாது குவிகின்ற, செந்தூரே-, ஈசன் அமர்வு இடத்தும்-இறைவன் எழுந்தருளும் தானங்களிலும், சிங்காதனம் பொலியும்-சிங்கந்தாங்கும் பீடம் பொலிவோடிருக்கும் செந்தூரே-, தான்-தானே, பொங்கி தருகப்பு உற தலம் முளைத்தான்-கிளர்ந்து வேங்கை மரமும் கிளைகளுமாய்ப் பூமியில் முளைத்து நின்றவரும், என்றும் -எக்காலத்தும், தருக்க புறத்தான்-வாதத்துக்குப் புறமாய் நிற்பவருமாகிய அறுமுகனது, தலம்-கோயிலாகும்.

வி.கு

கப்பு-கிளை, தருக்கம்-வாதம், அது எதிர் முக வழக்கு, புறத்தான்-வாதத்தினாலும் அறியொணாதவன்.

(91)

*மல்கும் பெருவளத்தான் மட்டாம்பல் விஞ்சுதலாற்*
*செல்லாமை கான்றிரியுஞ் செந்தூரே-கல்லாலான்*
*கற்புதவஞ் சாடினான் கான்முளைகீ ரன்கிடந்த*
*கற்புதவஞ் சாடினான் காப்பு.*

ப-ரை

மல்கும் பெரு வளத்தால்-செழிக்கின்ற பெரிய செல்வவளங்களால், செல்லாமை கான் திரியும்-வறுமையானது இடமின்றிக்காட்டில் அலையும், செந்தூரே-, மட்டு ஆம்பல் விஞ்சுதலால்-தேன்பொதிந்த குவளைகள் மிகுந்து கிடப்பதால், செல்-வயலுட்செல்லும், ஆ மை-பசுக்களும் ஆடுகளும், கான்று இரியும்-கக்கி விலகிச் செல்லும், செந்தூரே-, கல் ஆலான்-கல்லாற்கீழ் எழுந்தருளியிருப்பவரும், கற்பு உதவு ஐஞ்சு ஆடினான்-தியானத்துக்குதவும் ஐந்தொழில் நடனத்தை ஆடுகின்றவருமாகிய சிவனுக்கு, கான்முளை -மகனாகும் சிறுவனும், கீரன் கிடந்த கல்புதவம் சாடினான்-புலவனாகிய நக்கீரன் அடைபட்டுக்கிடந்த மலைக்குகையின் கதவினை ஒடித் தழித்தவருமான சண்முகனது, காப்பு-காவலமைந்த தலமாம்.

வி.கு

கல்லாலான்-தட்சிணாமூர்த்தி. அது சனகாதி முனிவர்களுக்கு உபதேசம் செய்ய எடுத்துக்கொண்ட வடிவம். கற்பு-தியானம், கான்முளை- பிள்ளை, நக்கீரர் வரலாறு வருமாறு.

பூதமொன்று இருமனப்பட்டுச்சிவபூசை செய்வோரைக் கொன்று உண்ணத் திட்டமிட்டது. அதன்படி தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை மலைக்குகையொன்றில் அடைத்துவைத்தது. ஆயிரம் பேர் ஆனதும் உண்பதே அதன் திட்டம். நக்கீரர் ஒரு பெரும் புலவர். அவரும் சிவபூசை செய்பவர். ஒரு நாள் அவர் குளம் ஒன்றில் நீராடிக்கரையிற் சிவபூசை செய்ய அமர்ந்தார். அப்போது கரையில் நின்ற ஆலமரத்திலிருந்து ஓர் இலை நீரிலும் நிலத்திலும் தோய விழுந்தது. என்ன ஆச்சிரியம், நிலத்தில் விழுந்த பாதி பறவையாயிற்று. நீரில் விழுந்தபாதி மீனாகியது. அதனால் அவை இரண்டும் ஒன்றை ஒன்று இழுக்கத்தொடங்கின. பறவையும் மீனும் தோற்றுவித்த கலவரத்தால் நக்கீரர் கண் விழித்துப்பூசையை மறந்தார். இது பூதத்துக்கு வாய்ப்பாகியது. அது உடனே நக்கீரரைத்தூக்கிச் சென்று குகையில் இட்டுப் பெருங்கல் ஒன்றால் அடைத்துவிட்டு வெளியே சென்றது.

அப்போது குகையில் அடைபட்டுக்கிடந்த ஏனையோர் நக்கீரரை நோக்கி, இதுநாள்வரை நாம் உயிரச்சமின்றி இருந்தோம். இன்று நீவந்ததும் ஆயிரவரானோம். அதனால் இற்றைத்தினமே நாம் அனைவரும் உயிர் நீக்கும் நாளாம் என்று வருந்தினர். அது கேட்ட நக்கீரர், முருகனைத் தியானித்துத் திருமுருகாற்றுப்படையைப் பாடியருளவே. முருகன் தோன்றிக் குகைக்கதவைச்சாடி எல்லோரையும் மீட்டான் என்பதாம். (92)

*கூவப் படப்பையர்க்குங் கோபுரங்காண் கோயிற்குந்*
*தேவம் பிகைமலருஞ் செந்தூரே-ஏவலர்பூ*
*முட்டைக்கு மாரன் முனைப்பழித்தே கானின்ற*
*முட்டைக்கு மாரன் முனைப்பு.*

ப-ரை

கூவ படப்பையர்க்கும்-கிணற்றோடு கூடிய தோட்டம் உடையார்க்கும், தே அம்பி கை மலரும்-விலைக்குக் கொண்ட நீர்ப்பொறிகள் கைகளோடு விளங்கும், செந்தூரே-, கோபுரம் காண் கோயிற்கும்- கோபுரங்கள் தோன்றும் ஆலயங்களுக்கும், தே அம்பிகை மலரும்- தெய்வமாகிய பராசத்தியும் அங்கே மலர்ந்திருக்கும், செந்தூரே-, ஏ அலர் பூ முள் தைக்கும்-பாணமாக மலரும் பூக்களாகிய முட்களால் தைக்கும், மாரன், முனைப்பு அழித்து - மன்மதனது முதன்மையை இன்மை செய்து, கான் நின்ற - காட்டின்கண் நின்ற, முட்டை குமாரன்- முட்டை என்னும் இடுகுறி ஆக்கங்கொண்ட முருகவேளது. முனைப்பு-முற்பட்டபதியாம்.

வி.கு

தே-விலைக்குக்கொள்ளுதல் தே-தெய்வம், மன்மதனது முனைப்பை அழித்தல்-மன்மதனது அழகை முருகன் தன் அழகால் அழித்தல். மன்மதன்-வேள், முருகன்-செவ்வேள். குமரன் என்னும் பெயரும் அப்பொருளை விளக்கியவாறாம். முருகன் முட்டைப்பெயர் தாங்கியது பொய்யா மொழிப் புலவர் வரலாற்றிலாம். அது வருமாறு.

பொய்யா மொழிப்புலவர் சிவனையே பாடுபவர். அவருடைய முனைப்பை அறிந்த முருகன் ஒரு நாள் அடியார் போலச்சென்று குமரனையும் பாடுங்கள் என்று கேட்டார். அதற்குப்புலவர் கோழியைப்பாடிய வாயாற் குஞ்சைப்பாடோம் என்றார். உடனே குமரன் நாணினான் போன்று விடைகொண்டு சென்றான். பின்னர் புலவர் ஒரு நாள் காட்டு வழியிற் சென்றார். அப்போது முருகன் வேடனாக அங்கே தோன்றிப்புலவரை வழிமறித்துத் தம் பெயரை முட்டை எனக்கூறித் தம் மீது நற்றாயிரங்கல் துறையில் ஒரு பாடல் இசைக்கும்படி வற்புறுத்தினார். அப்போது வேடனுக்கஞ்சிய புலவர் "பொன் போலும் கள்ளி" எனத் தொடங்கும் வெண்பாவில் முட்டை என்ற சொல்லை வைத்துப்பாடினார். அதனைச் செவியேற்ற குமரன் நீ முன்பு குஞ்சைப்பாடேன் என்ற வாயால் இப்போது முட்டையைப்பாடியது வியப்பே என்றதும் புலவர் வேடனாய் வந்தவன் முருகனே என அறிந்து தம்பிழை பொறுக்க வேண்டினார். அப்போது முருகன் புலவர் நாவில் வேலால் எழுதி மறைந்தருளினான் என்பதாம்.

(93)

*சாய்ந்தவிழி யார்தனத்துந் தாணுவிழுத் தொண்டிடத்துந்*
*தேய்ந்தவா ரம்மாளுஞ் செந்தூரே-காய்ந்த*
*திருக்குடையா ரம்படையார் தெவ்வட்ட வென்றித்*
*திருக்குடையா ரம்படையார் சேர்பு.*

ப-ரை

சாய்ந்த விழியார் தனத்தும்-கடைக்கட் பார்வையராகிய மகளிரது கொங்கைகளிலும், தேய்ந்த ஆரம் ஆளும் -சந்தனக்குழம்பு ஆட்சிசெய்யும் செந்தூரே-, தாணு விழு தொண்டிடத்தும் -சிவ பெருமானுக்குச்சிறந்த தொழும்பராயுள்ளவரிடத்தும், தேய்ந்த வாரம் மாளும்-குறைந்த பக்தி இறந்துபோகும், செந்தூரே-, காய்ந்த திருக்கு உடையார் அம்பு அடையார்-விலக்கப்பெற்ற வஞ்சகம் உள்ளாரது உலகத்தைச் சேராதவரும், தெவ் அட்ட வெற்றி திரு குடையார்-பகைவரை அழித்த அழகிய கொற்றக் குடையினரும், அம் படையார்-அழகிய படைகளை உடையவருமாகிய முருகனது, சேர்பு-சேர்த்தலுக்குரிய இடமாம்.

வி.கு

சாய்ந்தவிழி-சரிந்த கண், அது கடைக்கண்பார்வை. தொண்டு -ஆகுபெயர், குறைந்த பக்தி மாளும் எனவே அவர்பக்தி நிறைவுடையது என்பது பெறப்பட்டது. வாரம்-அன்பு, அது பக்தியாம், காய்தல்-விலக்குதல். படை-சிவபிரான் கொடுத்த பதினொருபடைகளும் வேலுமாம். அன்றித்தேவசேனையுமாம்.

(94)

*எற்றிடவே தண்முத்து மேத்துமறை யோரிசையுந்*
*தெற்றிக் கிடைமலருஞ் செந்தூரே-கற்பகஞ்சேர்*
*நாட்டப் புலவ னகர்மீட்டான் செந்தமிழ்த்தேன்*
*நாட்டப் புலவ னகர்.*

ப-ரை

தெற்று இக்கு எற்றிட-கால்களை இடறச்செய்யும் கரும்புகளை வெட்டுதலும், இடை அக்கரும்புகளுக்கிடையில், தண் முத்து மலரும் - குளிர்ந்த முத்துகள் பிரகாசிக்கும், செந்தூரே-, ஏத்தும் மறையோர் இசையும்-பரம்பொருளைத்துதிக்கும் வேதியரது இசைப்பாட்டும், தெற்றி கிடை மலரும்-திண்ணைகளில் அமைந்த வேதபாடசாலைகளில் பரந்திருக்கும், செந்தூரே-, கற்பகம் சேர் நாட்டு அ புலவன்-கற்பகதரு. இணைந்த சுவர்க்கத்துள்ள அந்தத்தேவனாகிய இந்திரனது, நகர் மீட்டான்-அமராவதி நகரை மீட்டவரும், செந் தமிழ் தேன் நாட்ட புலவன்-செவ்விய தமிழாகிய தேனில் விருப்புடைய புலவனுமாகிய சேந்தனது, நகர்-நகரமாம்.

வி.கு

முத்துகள் சிந்தும் எனவே கரும்புகள் செழிப்புடையன என்பது பெற்றாம், ஏத்துதல்-உலகம்புகழ்தல் எனவும் நின்றது. நாடு-ஈண்டு சுவர்க்கம், அடியார் பாமாலையை ஏற்பதும் களவியலுக்கு உரைகண்டதும் முருகனைத்தமிழ்ப்புலவன் ஆக்கின. நகர்-கோயிலுமாம். (95)

*வாசமனைத் தேவியரும் வாதப் புலவோருந்*
*தேசங் களிக்கமலர் செந்தூரே-ஈசனெனத்*
*தாரணிக்கு வந்தான் றனமலையாள் வள்ளியிட்ட*
*தாரணிக்கு வந்தான் றலம்*

ப-ரை

வாச மனை தேவியரும்-வதிவிடமாகிய இல்லத்துள்ள தலைவியரும், தேசு அங்கு அளிக்க மலர்-ஒளியினை அவ்வில்லங்களுக்கு வழங்க அந்த இல்லங்கள் பிரகாசித்திருக்கும், செந்தூரே-, வாத புலவோரும் - தருக்கம் வல்ல புலவர்களும், தேசம்களிக்க மலர் - நாடு மகிழும்படியாகப் பிரகாசிக்கும், செந்தூரே-, ஈசன் என தாரணிக்கு வந்தான் - சிவன்தான் என்னுமாறு பூமிக்கு வந்தருளியவரும், தனம் மலை ஆள் வள்ளி இட்ட - கொங்கைகளாகிய மலைகளை ஆட்சிசெய்யும் வள்ளி நாயகியார் புனைந்து நின்ற, தார் அணிக்கு உவந்தான் - மாலை அழகால் மகிழ்ந்த வருமாகிய குமரனது, தலம் -திருக்கோயிலாகும்.

வி.கு

வாசம் -இருப்பிடம், தலைவியரால் இல்லங்கள் பிரகாசிக்கும் எனவே அவர்கள் கிருகலட்சுமியர் என்பது குறிப்பு, தேசம்-இங்கு செந்தூர் நிலத்தோடு அது சார்ந்த நாட்டையுந்தவியது. ஈசன் எனவருதல்-அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப் பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பாய் வருதல். தனமலையாள் - செல்வமலையாகிய வள்ளி மலையாள் எனினும் ஒக்கும் . அணிக்கு -உருபுமயக்கம்.
(96)

*உப்பரிகை மாடத்து மொண்டொடியார் மார்பகத்துஞ்*
*செப்புங் கலசமுறுஞ் செந்தூரே - ஒப்பின்*
*மயிலை யுருப்பெயர்த்தான் மாமுனிசி றார்தம்*
*மயிலை யுருப்பெயர்த்தான் மாண்பு.*

ப-ரை

உப்பரிகை மாடத்தும் -நிலாமுற்றங்களிலும் மாளிகைகளிலும், செப்பும் கல் அசம் உறும்-விதந்து பேசும் கல்லிற் செதுக்கியகுதிரைகள் பொருந்தியிருக்கும், செந்தூரே-, ஒள்தொடியார் மார்பு அகத்தும்-ஒளிர்கின்ற வளையலணிந்த மகளிரது மார்பிலும், செப்பும் கலசம் உறும் - குங்குமச் சிமிழோடுகுடமும் இணைந்திருக்கும், செந்தூரே-, ஒப்பு இல் மயில் ஐ உரு பெயர்த்தான் - உவமைநீங்கிய மயிலாகிய அழகிய வடிவத்தைச் செலுத்தியவரும், மா முனி சிறார் தம் -பெருமுனிவராகிய பராசரருக்குப்பிள்ளைகளாய் நின்றவரது, மயிலை உரு பெயர்த்தான் - மீன் வடிவத்தைப் போக்கிய வருமான முருகனது, மாண்பு -மாட்சிக்கமைந்ததலமாம்,

வி.கு

கல்லசம் -கலசமெனநின்றது, அசம் - குதிரை, அன்றி ஆடுமாம். செப்பும் கலசமும் தனங்களுக்கு உவமை. ஒப்பு இல் மயில் - உவமை நீங்கிய சூரபன்மனாகிய மயில், பராசரமுனிவர் தம் சிறுவர்களது மீன்வடிவம் நீங்கிய வரலாறு.

பராசர முனிவர் உச்சிக்காலச் சந்தியாவந்தனம் செய்யச் சரவணப் பொய்கைக்கு வந்தார். அவ் வேளை அவர்சிறார் அறுவர் அங்கே நீந்தி நீரைக்கலக்கி மீன்களுக்குத்தொல்லை கொடுத்தனர். அதனைக்கண்ட முனிவர் அவர்களைப்பார்த்து நீங்கள் மீன்களை வருத்தியமையால் நீங்களும் மீன்களாகக் கடவீர் என்று சாபமிட்டுச்சென்றதும் அவ்வறுவரும் மீன்களாயினர். பின்னர் சிவனது நெற்றிக்கண்ணிலிருந்து வந்த ஆறு பொறிகளும் ஆறுகுழவியராய் அங்கே வாழ்ந்த நாளில் சிவபிரான் உமையோடும் அங்கே எழுந்தருளினார். அப்போது உமையவள் குழவியர் அறுவரையும் ஒன்றாக்கி அணைத்துத்தமது திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தெடுத்துக் குழந்தை முருகனுக்கு அருத்தினாள். முருகன் பருகியபால் பெருகிச் சரவணத்தும் பாய்ந்தது. அந்தப்பாலை மீன் வடிவில் உலாவிய சிறுவர் அருந்தியதும் முன்னர்ப் போலவே மனித வடிவம் பெற்று முருகனை வணங்கினர். பின்னர் அவர்கள் பரங்குன்றம் சென்று முருகனிடம் உபதேசம் பெற்றனர். (97)

*ஏற்றுந் திரையு மினவளைசேர் தண்டம்புஞ்*
*சிற்றிலைமுத் தாடிவருஞ் செந்தூரே- கொற்றக்*
*கணமலைத்த தாவடியான் காதலிய ரேங்கக்*
*கணமலைத்த தாவடியான் காப்பு.*

ப-ரை

எற்றும் திரையும் -மோதும் கடலலையும், சிற்றிலை முத்தாடி வரும் -சிறுமியர் கட்டும் மணல் வீடுகளை முத்தமிட்டு வரும். செந்தூரே-, இன வளை சேர் தண் அடம்பும் -தொகுதியான சங்குகள் சேர்கின்ற குளிர்ந்த அடப்பங் கொடிகளும், சிறு இலை முத்து ஆடி வரும் - சிறிய இலைகளில் உள்ள முத்துகளோடு அசைந்து தோன்றும், செந்தூரே-, கொற்ற கணம் மலைத்த தா அடியான் -வெற்றியினை உடைய பூத கணத்தவர்களையும் வருத்திய வலிய பாதத்தனான சூரபன்மனுக்கு, காதலியர் ஏங்க - மனைவியர் ஏக்கங்கொள்ள, கணம் அலைத்த தாவடியான - பேய்க்கூட்டங்களைப் போர்க்களத்தே அலைவுசெய்த போராளனாகிய அறுமுகனது, காப்பு - காவலமைந்த தலமாம்.

வி.கு

முத்தாடுதல் -மணல்வீடுகளை அழித்தல், காதலியர் -பதும கோமளை முதலாய மனைவியர் கணம் அலைதல் -நிணந்தின்னப்பேய்கள் அலைதல்.

(98)

*துப்பிதழார் கச்சுஞ்செஞ் சொன்றிக் கொடைப்புகழும்*
*செப்பினகி லங்கடக்குஞ் செந்தூரே-ஒப்பில்லான்*
*மாதிரத்த னம்புயத்தன் மாத்தடிந்த வேறாங்கு*
*மாதிரத்த னம்புயத்தன் மாண்பு.*

ப-ரை

துப்பு இதழார் கச்சும்-பவளம் போலும் அதரத்தினராகிய பெண்களது மார்புக்கச்சும், செப்பின் நகில் அங்கு அடக்கும் -சிமிழ் போலும் கொங்கைகளை அங்கே அடக்கிநிற்கும், செந்தூரே-, செப்பின் சொல்லுமிடத்து, செம் சொன்றி கொடை புகழும் அகிலம் கடக்கும் -செப்பமான அன்னதானப்புகழானதும் உலகத்தையும் கடந்துநிற்கும், செந்தூரே-, ஒப்பு இல்லான் -சமானம் நீங்கியவரும், மாதிரத்தன் -திசைகளாய்நிற்பவரும், அம்புயத்தன் -தாமரை ஆசனரும், மா தடிந்த வேல் தாங்கும் மா திரத்தன் -சூரபன்மனாகிய மாமரத்தை அழித்த வேற்படைக்கலத்தை ஏந்தும் பெரிய நிலைபேற்றை உடையவரும், அம் புயத்தன் -அழகுப் புயத்தவருமாகிய முருகனது, மாண்பு -மாட்சிமைத் தலமாம்.

வி.கு

செப்பின் நகில் அங்கு கச்சு அடக்கும் எனக் கூட்டி, குமிழ் போலும் கொங்கைகள் மார்புக்கச்சையும் அங்கே அடக்கும் எனவும் பொருள் கொள்க. அது கொங்கைகள் கச்சை மீறியவாறாம். அன்னதானப்புகழ் உலகையும் கடத்தல் -சுவர்க்கத்தையும் எட்டி நிற்றல், அம்புயத்தன் - தாமரை ஆசனத்தை அவன் சரவணத்தும் அடியார் நெஞ்சத்தும் கொண்டவன் என்பதாம். மேலும் பிரமதேவர் போற்சிருட்டி செய்ததையும் கொள்க. (99)

*மொய்ந்நாரைச் சேவலொடும் முத்தமிடா வன்றிலொடுஞ்*
*செய்யவாய்ப் பேடையுறுஞ் செந்தூரே - வெய்யமலங்*
*காயத் திருந்தார் கலிதேய்க்கார் மாஞான*
*காயத் திருந்தார் களம்.*

ப-ரை

பேடை-பெண் நாரையானது, செய் அவாய் - வயலை ஆவலுற்று, மொய்நாரை சேவலொடும் உறும் -நெருங்கி நிற்கும் நாரைச்சேவலோடும் அங்கே தங்கும், செந்தூரே-, செய்ய வாய் பேடு - சிவந்த அலகுடைய வேறுசில பெண் அன்றில்கள், முத்தம் இடா அன்றிலொடும் ஐயுறும்-முத்தம் கொடுக்காத ஆண் அன்றில்களைச்சந்தேகிக்கும், செந்தூரே-, வெய்ய மலம் காய திருந்தார் - கொடிய மும்மலங்களும்வறளுமாறு தம்மைத்திருத்திக்கொள்ளாதவரது, கலி தேய்க்கார் - துன்பங்களைப்போக்காதவரும், மா ஞான காயத்து இருந்தார் - பெரிய ஞானத்திருமேனியில் தம்மை இருத்திக் கொண்டவருமாகிய சேந்தனது, களம் - தானமாகும்.

வி.கு

அன்றில் -நீர்வாழ்பறவை, அதன் அலகு சிவப்புநிறம் என்பதை "செவ்வாய அன்றில் துணை இழப்ப" என்னும் புகழேந்திவாக்கு வலி செய்யும். பெண் அன்றில் ஆண் அன்றிலைச் சந்தேகிக்கிறது. காரணம் ஆணுக்குவேறு தொடர்பும் உண்டோ என்பதாம். மலம் காயத்திருந்தார் - மும்மல முடையசகலர், கலி -பிறிவித்துன்பத்தோடு வறுமையுந்தழுவியது.

(100)

*வாழி திருச்செந்தூர் வாழி இளமுருகன்*
*வாழிதெய்வ யானையுடன் வள்ளிமகள் - வாழி*
*மயில்வா ரணங்கடொழு மாணடியார் வாழி*
*அயில்வாழி என்று மலர்ந்து.*



திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா ஆக்கியோன் நாவலர் மருகர் வித்துவ சிரோமணி பொன்னம்பலப்பிள்ளை மாணவர் பரம்பரையில் வந்தவர். அதனால் இவரது தமிழ்ப் பணி மகத்தானதே. இன்று வரை வெளிவந்த இவரது ஆக்கங்கள் பதினேழு. செய்யுட் பிரபந்தங்கள், உரை நூல்கள், ஆய்வு, தமிழ்த்திறன் என அவை விரியும்.

செய்யுட் படைப்புகளில் தச்சைச்சிலேடை வெண்பா, திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா, யார்க்கருத் திரிபந்தாதி என்பன இறுக்கமானவை, கடினமானவை. இவர் எழுதிய உரை நூல்கள் ஒன்பது. அவற்றில் கந்தபுராணம் யுத்த காண்டம் முதற் பதினொரு படலங்களும், கோணமலை யமக அந்தாதியும், பிறவும் விதந்து பேசப்படுவனவே. "**மணிவாசகர் வரலாறு**" ஆய்வு நூல் அது சிந்தனைக்குரியது. அதில் மணிவாசகர் கோவை பாடவில்லை என்பதும், பிறவும் அவரது புதிய ஆய்வுகள். தமிழ்த்திறன் என்ற பகுதி இன்று பலராலும் எழுதப்படும் தமிழ்ப் பிழைகளையும், பிறவற்றையும் எடுத்துக் காட்டுவது. மேலும் திருக்குறள், பரிமேலழகர் உரையில் ஒரு சிலவற்றை இவர் மறுத்துப்புத்துரை கண்ட விதம் எல்லாரதும் போற்றுதற்குரியதே.

இவர் பெற்றுக் கொண்ட பட்டங்கள் பல. 'செந்தமிழ்ச் செல்வர்' - திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் வழங்கியது. 'சிலேடைக் கவிரத்தினம்' - இலக்கிய கலாநிதி பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை அவர்கள் வழங்கியது. 'சிலேடைப் புலவன்' - இலக்கிய கலாநிதி பண்டிதர் மு.கந்தையா அவர்கள் வழங்கியது.

இவற்றால் பண்டைய யாழ்ப்பாணத் தமிழ்ப் பாரம்பரியத்தை இன்றுவரை பேணி நிற்பவர் வரிசையில் இவர் முதலிடத்தைப் பெற்றுள்ளார் என்பது மிகையன்று.

ஐ.செல்வராசா
ஆசிரியர்
யா/நெல்லியடி ம.ம.வி
கரவெட்டி.

லெட்சுமி ஒவ் செற். நாவலர் மடம், கரவெட்டி.